ஓம் பரப்ரஹ்மணே நம:

# அமிர்தகுணபோதினி

அறிவை விளக்கி, உற்சாகத்தைப் பெருக்கி, ஆநந்தத்தைத் தரவல்லதான அநுபவ விநோத ஞான கலாவிலாஸங்கள் நிறைந்திலங்கும் அமிர்தச் சுவையுள்ள மாதப் பத்திரிகை.

பத்திராசிரியர்:— திரிசிரபுரம் - எஸ். ஜி. இராமாநுஜலு நாயுடு.

" எண்ணிய எண்ணியாங் கெய்துப; எண்ணியார்
COPY RIGHT] திண்ணிய ராகப் பெறின். " (திருக்குறள்.) [REGISTERED

| கமலம்-5.<br>Vol. 5. | சென்னை : பிரமோதூதஸூ ஆனிமீ 1உ<br>1930-ம்ஸூ ஜூன்மீ 14உ | இதழ்-51.<br>No. 51. |
|---|---|---|




" ஆட்டுவித்தால் ஆடாதார் யாரே?" இறைவனே நம்மை நடத்திச் செல்லுகின்றார். 'எல்லாம் ஈசன் செயல்' என்று கூறித் தனக்கு நேரிடும் கஷ்ட சுகங்களைப் பொறுமையுடன் அனுபவிப்பது புத்திசாலியின் காரியம். இன்ப துன்பங்களை லக்ஷியம் செய்யாதவனே சுகசாலி. அவனே அகங்காரத்தை யொழித்து ஞானத்தை யடையத்தக்கவன். ஞான சக்தியில் ஒருவித அசைவு உண்டானால், ஞான சக்தியானது இடம், காலம், கர்மங்களின் வன்மையால் பலவித சக்திகளாகும். பிரம்மம் ஒன்றே யென்று கருதி அந்த ஆதாரத்தில் இருக்கும் ஞானசக்தி தன்னைக் காலத்தாலும், இடத்தாலும், கர்மங்களாலும் வரையறுக்கப்பட்டதாய்த் தனக்குத் தானே எண்ணிக்கொள்ளுகிறது. இப்படியே ஞானசக்தி தன்னைப்பற்றி நெடுக யோசிக்கும்போது நாம ரூபங்களால் பேதாபேதத்தின் எல்லை யேற்படுகிற விஷயத்தை அறியத் தொடங்குகிறது. இத்துடன் பலவித விகல்பங்கள் தோன்றி காலம், இடம், கர்மங்கள் ஆகிய மூன்றுக்கும் தான் கட்டுப்பட்டதாக மாயையின் தூண்டுதலால் நினைக்கிறது. இந்த நிலைமையில்தான் அதற்கு ஜீவன் என்னும் பெயர் உண்டாகிறது. பலவித கஷ்டங்களை யுண்டாக்கிக்கொள்ளும் ஜீவன் பிறகு அகங்காரத்தோடும் சேருகிறது. அதாவது, அகங்காரம் என்பது ஜீவனோடும் ஒட்டிக்கொள்ளுகிறது. கொஞ்சத்தில் ஒழியாத இந்த அகங்காரம் பின்னர் புத்தியாக மாறிச் சில விஷயங்களை அறியும் சிற்றறிவைப் பெறுகிறது. இந்தப் புத்திக்கு மயக்கமுண்டாய் மனஸாக மாறி அந்த மனது எண்ணுதை எண்

மெதுவு விருத்திக்கு வருவதேது? தூங்கியவன் தன் வாழ்நாளில் தூங்கியே போய்விடுகிறான். இருட்டுவதற்கு முன் விளக்கைத் தேடி எடு.

ணங்களை யெண்ணிப் பத்து இந்திரியங்களாக மாறிச் சரீரமாகிறது. இவ்விதமாக, ஜீவன் உலகத்தில் ஸம்பந்தப்பட்டுப் படிப்படியாகத் தன் நிலைமையைத் தாழ்த்திக்கொண்டு சங்கற்பம் என்னும் கயிற்றால் கட்டப்பட்டுத் துன்பம் என்னும் வலையிற் சிக்கிக்கொள்ளுகிறது. ஆதியில் தனியே யிருந்த மனது அகங்காரத்தால்—ஆசையென்னும் பாசத்தால் கட்டப்பட்டுத் தன் செயல்களால் தானே ஸங்கடமடைந்து கூட்டில் அடைப்பட்ட விம்ஹத்தைப் போல் திரிகிறது. இவ்வித கஷ்டங்களை யடையாதிருக்க வேண்டிப் பகவானுடைய பாத கமலங்களை ஸதா தியானிக்கக்கடவோம்.

ஃ

"பெரியாரைத் துணைக்கோள்" என்பதற்கு மாறாக அவர்களைத் தூஷிப்பவர்கள் பல ருளர். இவர்களின் வாயை எப்படி அடக்குவது? ஏதேனும் பழைய கட்டடத்தில் பேசினல் எதிரொலி உண்டாகும். இவ்வெதிரொலி கேட்காமலிருக்க உபாயமென்ன? நாம் மௌனமாயிருப்பதே. இதைப்போல் துஷ்டர்களுக்குப் பதில் சொல்லாவிட்டால் அவர்கள் தங்கள் வாயைத் தாங்களே மூடிக்கொள்வர். இதைப்போன்றே மனதும் ஸத் விஷயங்களைத் தூஷித்து அதை அலக்ஷியம் செய்யும்படியும், தீய காரியங்களில் பிரவர்த்திக்கும்படியும் நம்மை ஏவும். அச்சமயம் அதற்கு எவ்வித பதிலும் சொல்லாமல் பகவத் தியானத்தில் ஈடுபட்டு மௌனமாகிவிட்டால் மனதும் தனக்குத் தானே செயலற்று அடங்கிவிடும். சற்று ஏமாறினோ வந்தது அனர்த்தம்!

ஃ

"ஜனன மரண துக்கங்கள்" என்பவை ராஜஸ தாமஸ குணங்களையுடைய மாந்தர்க்கே உரியன. ஸத்வ குணிகள் எப்போதும் அந்த பயத்தைக் கொள்ளார். அவர்களுக்குப் பிறவிப்பிணி இனி தங்கட்கு நேரும் என்ற துக்கமே யில்லை. அவர்கள் "விடுதலை"யின் நேரத்தை, அதாவது முக்தி கூடும் நேரத்தை எதிர்பார்த்துக்கொண்டு ஆநந்தமா யிருப்பவர்கள். எப்படி ஸர்ப்பமானது தன் மேற் சட்டையாகிய தோலைக் கழற்றி எறிகிறதோ, அப்படியே ஸாத்வீகர்கள் ஸம்ஸார துக்கத்தைத் தங்களின் உத்தமமான குணத்தால் விலக்கிக்கொள்ளுகிறார்கள். எல்லாம் பிரம்மம் என்றும், நான் அந்தப் பிரம்மமே யென்றும் தியானித்து, நான் வேறு உலகம் வேறு என்னும் பேத புத்தியைத் தொலைக்கவேண்டும். அனுபோகத்தாலும் பிரமாணத்தாலும் ஸகல வஸ்துக்களின் தன்மைகளையும் அறிந்து வியஸனத்தை விடவேண்டும். சென்ற காரியங்களையும், இனி யுண்டாகும் ஸம்பவங்களையும் நினையாமல் விருப்பு வெறுப்பின்றி எவன் ஸத்வகுண ஸம்பன்னனு யிருக்கின்றானோ அவனே புத்திமான். எல்லா வஸ்துக்களையும் ஸமதிருஷ்டியாக நோக்கி, ஆத்ம ஞானமே சிறந்ததென்றெண்ணி, உலக சுகங்களில் மனதைச் செலுத்தாமல் ஸமாதானமாயிருந்தால் ஸர்வ துக்கங்களும் நாசமாகும்.

ஃ

"உறுசி கண்ட பூனை உறியைத் தாவும்" என்னும் பழமொழிப்படி கிரமமாகவோ, அக்கிரமமாகவோ பொருளை ஸம்பாதிக்கும் வழியை யறிந்த

---

ஐந்து ரூபாய் நோட்டை எங்கேயோ வைத்தேன். இடம் ஞாபகமில்லை. கிடைக்குமோ—போனதேதானோ—எவர் எடுத்தனரோ—யாதோ! (K)

மனிதர்கள் அதைக் கொஞ்சத்தில் விடமாட்டார்கள். கிரமமான வழியானல் எவ்வித பாதகமுமில்லை. கிரமத்தவறான வழியிற் சென்று திரவியத்தை ஸம்பாதிப்பதுமட்டும் பெருங் கேட்டை விளைக்கும். அக்கிரம வழியில் செல்வோருக்கு எப்போதும் ஈசன் கிருபை செய்வார் என்பது பிசகு. ஒரு ஸமயம் அக்கிரமிகள் ஜயமடைவீது மற்றொரு ஸமயம் நாசமடைவதற்குக் காரணமேயன்றி வேறில்லை. சில ஆடுகளைப் பலியிடுமுன் ஆகாராதிகள் போட்டுக் கொழுப்பேற்றுவது வழக்கம். அதுபோல், பகவானும் மகா பாபிகளைத் தண்டிக்கு முன் அவர்களுடைய அக்கிரம காரியங்களுக்கு ஸகாயம் செய்வது ஸகஜமென் றெண்ணுகிறோம்.

ஃ

"விளக்கைப் பிடித்துக்கொண்டே தூணில் முட்டிக்கொள்வது அவிவேகம்." அதுபோல், நமது கண்ணுக்கெதிரில் அடிக்கடி மரண ஸம்பவங்களைக் கண்டும், நம்முடைய ஆத்மா கடைத்தேறும் வழியை நாம் பற்றாதது அறிவீனமன்றோ? ஒவ்வொருவனும் தன் சத்துருவின் கஷ்டத்தைப் பார்க்கும்போது தனக்கு எப்போதும் சுகமுண்டென்று நினைத்துக்கொள்வதும், தன் விரோதி மரணமடைவதைக் கண்டும் தான் சிரஞ்சீவியாக இருக்கப் போவதாய்ப் பாவித்துக்கொள்வதும் பேராச்சரியமன்றோ? இரு விதவைகளும் முண்டையென்று ஒருவரை யொருவர் தூஷித்துக் கொள்ளும்பொழுது தாங்கள் மட்டும் சுமங்கலிகளா என்பதை ஆராய்வதற்கு மறந்துவிடுகின்றனர். இவ்விதமே தங்களின் நிலையைச் சிந்தித்துப் பார்ப்பதில்லை. எப்பொழுதும் மனுஷ்யர்கள் தங்களுடைய குற்றத்தை நினைத்துப் பரிதாபப்பட்டுத் திருந்தாமல் பிறர் குற்றங்களை வெட்டியான்போல் ஊரெங்கும் பறை சாற்றுகின்றனர். இது அறிவின்மையன்றோ? நல்ல அறிவையும் குணத்தையும் கொண்டவர்கள் இவ்வாறு பிறர்மேல் தோஷாரோபணம் செய்ய இசையார். பகவத்தியானமானது துக்கங்களைப் போக்கடிப்பது மட்டுமன்று; துஷ்ட விருத்திகளையும் களைந்து பரிசுத்தமுள்ளவ னாக்குகின்றது. பகவானை நம்பியவன் பாக்கியவான்.

ஃ

"பிரார்த்தனை" யென்றால் பகவானை நோக்கி ஏதாவது கேட்பதென்று அர்த்தம். ஆனல், பக்தியோடு கூடிய எந்தக் காரியத்துக்கும் அப்பெயர் சாதாரணமாக உபயோகப்படுத்தப்படுகிறது. நம்மை சிருஷ்டித்த பரமபதியை ஸ்மரித்து அவருடைய ஆசீர்வாதத்தைப் பெறுவதற்கே பிரார்த்தனை செய்யப்படுகிறது. பிரார்த்தனை காலத்தில் அவரவர் வாய்விட்டுச் சொல்லும் வார்த்தைகளை விட, அவரவருடைய மனப்பான்மையே முக்கியமானது. பரம்பரையாக தெய்வ ஸ்தோத்திரத்திற் கேற்பட்ட சுலோகங்களைச் சொல்லி ஜெபிப்பதால் ஏற்படக்கூடிய உணர்ச்சி தாய்ப் பாஷையில் அதை மொழிபெயர்த்துச் சொல்வதால் ஏற்படாது. காயத்ரி மந்திரத்தை அப்படியே உச்சரிப்பதுதான் சிலாக்கியம். அதை மற்றொரு பாஷையில் மொழி பெயர்த்துச் சொன்னால் அது ரஸமூயிராது. கடவுளே என்று நாம் தெய்வத்தைக் கூப்பிடுவதற்கும், ராம நாமத்தை ஜெபிப்பதற்கும் வித்தியாஸ முண்டு. ராம நாமத்தைச்

---

கூப்பிட்டால் வந்துவிடக்கூடியவர்களை அழைப்பதில்லை. அழைக்கத் தயாராகிக் குறிப்பிட்ட ஒருவரை வலிய அழைக்கையில் அவர் வருவதில்லை.

சொன்ன மாத்திரத்தில் கோடிக் கணக்கான ஹிந்துக்களுக்கு ஓர் எழுச்சி யுண்டாகிறது. வெகு காலமாக உபயோகிக்கப்பட்டு வந்திருக்கிற ஒரு பதத் திற்கும், புதிதாக உண்டுபண்ணும் பதத்திற்கும் சக்தியில் வித்தியாஸ மூண்டு. ஆகையால், மந்திரங்கள், ஸ்தோத்திர பாடங்கள் முதலியவற்றை சமஸ்கிருதத் தில் சொல்வதே நல்லது. ஆனால், அர்த்தம் தெரிந்து ஜபிக்க வேண்டியது அவசியம். தெய்வம் இல்லாமல் ஒன்றும் நடவாது; நாம் குயவன் கைமண் ணுக்குச் சமானம் என்ற உணர்ச்சி ஒவ்வொருவருக்கும் பிரார்த்தனு காலத்தில் ஏற்படவேண்டும். பிரார்த்தனை அல்லது ஜெபத்தின் உத்தேசம் அதுதான். அவரவர் செய்த பிழைகளுக்குப் பகவானிடத்தில் மன்னிப்புக் கேட்டு, இனி யாவது நல்ல புத்தி கொடுக்கும்படி வேண்டுவதற்கு அது நல்ல சந்தர்ப்பம்.

ஃ

"மதத் துவேஷம்" இந்நாளில் இது விசேஷம். மதத் துவேஷம் சகோதர அபிமானத்தைக் கொலை செய்துவிடுகின்றது. தன் மதமே உயர்ந்த தென்று உணரும் அறிவு உத்தமமேயாயினும், அதற்காக மற்ற மதங்களைத் தாழ்த்திப் பிதற்றுவது மௌடீகமாகும். கடவுளின் பெயரால் நாம் மதச் சண்டை யிடுவதும், சாதிச் சண்டை செய்வதும், கடவுளை வைத்துச் சூதாடு வதற்கு ஒப்பாகும். மதம் என்பது பின்னும் இணைத்தல் அதாவது 'கடவு ளுடன் நம்மை ஒன்றுபடுத்துவித்தல்' என்னும் பொருள் படும். கடவுளினின் றும் நம்மைப் பிரித்தது ஒருவினை. அவ்வினை யறிந்து நிவர்த்தி நாடி அறிவு பெறுதலே விடுதலைக்கும், முக்திக்கும் வழி.

ஃ

"சாந்தம் மகா பெரிய சமுத்திரம்" மனமே ஆகாசத்தில் ஞானம் உதய மாகிறது. ஸத்துக்கும் அஸத்துக்கும் மனமே ஸ்தானம் ஆகுகிறபடியால் ஸத்தை நிலைநிறுத்த புத்தியே பிரதான தேவதை. ஆகையால், மனிதர்கள் புத்தியை விருத்தி செய்துகொள்வது முதற் கடமையாகும். மனம் மதங் கொள்ளாதபடியும், இந்திரியங்கள் ஸ்வேச்சையாய்த் திரியாதபடியும், ஆகார வியவஹாரங்களைக் குறைத்து கிரமமான மிதாஹாரமுண்டு மனதை ஸ்வாதீ னத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். ஸத்ஸஹவாஸமும், அன்பான ஸம்பா ஷணையும், கபடமில்லாத ஹிருதயமும், ஆரோக்கியமான உணவும், சுத்தமான நடையும், ஸ்நான ஸ்நானமும், ஸதா உத்ஸாகமும், தெய்வ பக்தியும், பரோப காரமும், ஜீவகாருண்யமும் மனிதர்களால் நித்திய விரதங்களாக அநுஷ்டிக்கத் தக்கவை. மனதுக்கு ஆறுதல் சாந்தமேயாகும். சாந்தமென்னும் மகா ஸஞ் சீவினி ஔஷதத்தை நித்யமும் ஸேவிக்கவேண்டும். சாந்த தேவதையின் ஆராதனை அநுதினமும் செய்வது நலம். ஒவ்வொருவரும் சாந்த மூர்த்தியை உபாஸனை செய்த பிறகே சாப்பிட வேண்டுமென்று நியமமும் ஏற்படுத்த வேண்டும். மனித ஸமூகத்திற்குக் கோபம் பரம சத்துரு. மனமே ஜகத்தை சிருஷ்டித்தது. அந்த மனமே மாயையில் அகப்பட்டுத் தவிக்கிறது. ஒரு முறை கட்டுப்பட்டது போலும், மறுமுறை கட்டுப்படாதது போலும் உலாவு

---

தமிழ் நாட்டு மஹா விகடச் சக்ரவர்த்தியாகிய "மஹா விகட தூதன்" பத்திராதிபரை இப்பொழுது நினைக்கும் தமிழ் மக்கள் எங்கோ ஒரு சிலர். நினைப்பினும் நினையாவிடினும் பிரசித்த புருஷர்களின் நூல்கள் என்றும் அழிவதில்லை. அழிவதில்லை யாயினும் அவை விலைக்கு அகப்படுகிறதில்லை.

கிறது. இவைகளை யெல்லாம் தீர்ப்பதற்கு விவேகமென்னும் நாயகனே தகுதி யானவன். சாந்தமென்னும் சிந்தாமணியை ஒவ்வொருவரும் தரித்துத் தத்தம் கடமைகளைச் செய்வாராக. உலகத்திலுள்ள ஸகோதர ஸஹோதரிகளெல்லாம் மனதைக் கட்டி யாள்வீராக. அதை அஞ்ஞான துக்க ஸாகரத்தில் அழுத்தா மல் நித்யானந்த மயமான ஞானனுபூதியிலிருத்தி ஸத்ய தர்மங்களை ரக்ஷிப் பார்களாக. மதில் உடைந்தால் கட்டலாம்; மனம் உடைந்தால் கட்ட முடி யாது. அதைக் கட்ட சுண்ணும்பு செங்கல்லால் ஆகாது. பரம சாந்தம் என்னும் வாக்கியத்தால்தான் முடியும். அதுவே தக்க அஸ்திவாரம். சாந்தமே! மனதை உன்னிடம் ஒப்புவித்தாயிற்று; நீ அதைக் காப்பாற்று வாயாக. உன்னுடைய கிருபையால் துர்க்குணங்கள் மனதைத் தொடாமல் விலகக்கடவது. சாந்தமே! நீயே ராஜ்யாதிபதியாய் ஆளக்கடவாய். எல் லோரும் சாந்தத்தைக் கொள்வார்களாக. தனதானிய அதிகாராதிகளால் கர்வ முற்றிருப்பவர்களுக்குக் கூட சாந்தமே நீ தயையுடன் கிருபை செய்வாயாக. சாந்தமே! உன் நாமம் வாழக்கடவது.

ஃ

"நினைப்புபோல் நிலை" யார் எப்படி நினைக்கின்றனரோ, யார் எப் படிச் செய்கின்றனரோ, யார் எப்படி ஆசரிக்கின்றாரோ அவர் அப்படியே ஆகி றார். நல்ல காரியங்களை நினைப்பவர்களும் செய்கிறவர்களும் நல்லவராகிறார்கள். பாப காரியங்களை எண்ணுவோரும் புரிவோரும் பாபிகளாகிறார்கள். பாப காரியங்களை இயற்றுவதனால் ஆன்மா பாபமுள்ளதாகிறது. தர்ம காரியங்களைச் செய்வதனால் ஆன்மா பரிசுத்தமுள்ளதாகிறது.

ஃ

"ஓ! பக்தவத்ஸலா!" பாவிகளைப் பாதுகாக்கும் ஓ! பரம புருஷா! எனது ஆத்மா பாவ எண்ணங்களாகிய மிருகங்களிடம் சிக்கித் தத்தளிக்காமல் வன்மையும் உறுதியுமான திடதாருட்யத்தைப் பிரசாதிப்பாய். இன்று எனது ஆத்மா அடையும் ஜயத்தை மறுபடியும் அந்தகாரம் கவ்விக்கொள்ளாதபடி காத்து உமது பாத பத்மங்களைச் சேரும் பக்குவத்தைப் பெற்று மகிமையும் மேன்மையும் கொள்ளும்படி செய்வாய். உமது பரிசுத்த நாமம் சதா ஜெயம் பெற்றுப் பிரகாசிப்பதாக.

ஃ

"ஓ! பரம்பொருளே!" உண்மையான பிரேமையினாலே தம்பதிக ளாகிய எங்கள் இருவருடைய ஆத்மாக்களைப் பந்தப்படுத்தி, நான் என் மனைவியிலும், என் மனைவி என்னிலும், நாங்களிருவரும் உன்னிலும் கலந்து பக்திப் பிரகாச பாகவதோத்தமர்களாய்ச் சாந்தமடையச் செய்வாய். எம்மை விபசாரம், அசுத்தம், கெடுதி முதலானவைகட்கு உட்படுத்தாமல் பரிசுத்த ராக்குவாய். எம்மை இந்த உலகத்திற்கு மேலானவர்களாக்கி நின்னிடத்தில் சதா கூடி பூரண மனது பொருந்தி வாழ அருள்புரிவாய். உன் பாதம் துணை.

---

தாங்களே கட்டிக்கொண்ட கோயிலுக்கு, சரித்திர பூர்வமான கோயி லின் உன்னதம் வராது. அதுபோல், நாமே ஒருவருக்கு நமது கையால் ஒன்று தருவதிலும், நமது பெரியோர்களின் மூலம் அதைக் கொடுப்பித்தல் விசே ஷித்த மதிப்புக்கு வழி. பெறுவோருக்கும் அது ஒரு கௌரவம் ஆகும்.

அமிர்தகுணபோதினி

பிரமோதூதஸூ ஆனிமீ 1௳

# நமது வாழ்வில் மிருக ஆவேசம்.

ஆவேசத்தில் உயர்வுமிக்கது தெய்வ ஆவேசம்; கடைபட்டது மிருக ஆவேசம். புலி, சிங்கம், யானை, குதிரை ஆகிய இவைகளின் ஆவேசத்தில் நன்மை எதிர்படுகிறதா? குதிரைக்குண்டான ஆவேசத்தில் வண்டி நொண்டியாகிறது. ஆவேசம் பிடித்த மாடு கொம்பால் குத்திப்போடுகிறது. பகுத்தறிவமைந்த மானிடன் தெய்வ ஆவேசத்தைக் கொள்ளுதற்கேற்ற பக்குவம் நாடாமல், மிருக ஆவேசத்தில் மிகுதிப்பட்டுவிடுங்கால் தன்னையே—தன் அறிவையே—மறந்தவனாகின்றான். முன்னைய நற்குணங்கள் மூடுண்டுபோக, மூர்க்கவெறி பிடித்து முறடனாகின்றான். தேகத்திமிர் கொண்டவனுக்கு மிருக ஆவேசம் அதிசுலபம். எதற்கும் அவன் கை அறைவதற்கு ஓங்கிவிடும். தன்னை எதிர்ப்பவரில்லையென்னும் ஒரு கர்விக்கு, அவனை ஒரு துரும்பாக மதிக்கும் ஸாத்விகன் ஒருவன் எதிர்படுகையில் மிருக ஆவேசம் மிதம் மீறுகிறது. தன்னை அலக்ஷியம் செய்த ஸாத்வீகனைப் பகைக்கவும், எதிர்க்கவும் உடனே கர்வி துள்ளிக் குதிக்கிறான். கர்வியின் நடவடிக்கை எல்லைகடந்துவிடுகையில், ஸாத்விகனும் மிருக ஆவேசங் கொள்ளுவானானால் அதன் முடிவு விபரீதமாய்விடலாம். தேகத்திமிர்கொண்ட கர்வி தன் மனத்தை யடக்கி ஆள்வானாயின்,—தன்னை சிக்ஷிக்க நியாயஸ்தலம் உண்டென்று கருதுவானாயின்,—மிருக ஆவேசத்தினின்றும் தணிதல் கூடும். இவ்விதமே, ஸாத்வீகனும் பதிலுக்குப் பதில் மிருக ஆவேசம் கொள்ளாது, அந்த நிமிஷம் மௌனமாய்ச் சகித்துச் செல்லும் தன்மை ஏற்பானாயின், அந்த நிமிஷம் நேரவிருக்கும் பொல்லாங்கைத் தடுத்துவிடுதல் சுலபமாகும்.

❧

மிருக ஆவேசம் உதிக்குங்காலையில் எதைச் செய்ய மனம் ஏவுகின்றதோ அதைச் செய்யாதிருந்துவிடுதல் பின்னுக்கு எவ்வள

வோ ஆறுதலுக்கு இடம் தரும். ஒரு கடைக்காரன் தன்னிடத்து வேலையாளாய் இருக்கும் ஒரு சிறுவனிடம் அற்ப குற்றத்திற்காக, மிருக ஆவேசம் கொண்டு படீர் படீர் என அறைந்துவிட, அச்சிறுவன் கதறுகிறான். ஏதோ வறுமையின் கொடுமையால், அதிலும் இளமையில் நேர்ந்த வறுமையால் அக்கடையில் சொற்ப சம்பளத்திற்கு அச்சிறுவன் அமர்கிறான். அவனது ஏழ்மைக்கு இரங்கி அன்புடன் நடத்தாது அல்ப தவறுதலுக்கு மிருக ஆவேசம் கோள்பவன் தனது வருங்கால நிலையை அந்த வேளையில் சிறிது நீளச் சிந்திக்கக்கடவன். எத்துணையோ பெயருக்கு இடையில் வியாபாரம் முறிந்து தம்மிடம் வேலை செய்தவர்களிடமே தாம் வேலைக்கு அமர்தலும், அவர்களிடமே தங்களின் மக்களைச் சொற்ப சம்பளத்திற்கு இருக்க விடுதலும் நேர்ந்திருக்கின்றது. அவ்வாறானபோது, தனது சிறுவனை அக்கடைக்காரன் இவ்வாறு புடைப்பானாயின் பெற்ற வயிறு எவ்விதம் எரியுமென்பதை இந்தச் சமயம் சற்றே யோசிக்கக்கடவன். மானிட வாழ்வு ஒரு நிலையா? வியாபாரம், உத்தியோகம் ஒரு சாஸ்வதமா? எததனையோ பெயருக்குத் தவறிவிடவில்லையா? இந்த நிச்சயமற்ற நிலையில் தனக்கு மிருக ஆவேசமேன்? அந்த எளிய சிறுவனை மௌடீகமாய் அறைவானேன்? தனது எஜமான் ஸ்தானத்தில் ஒரு புதுப் பெருமை புகுத்திக்கொள்வானேன்? மிருக ஆவேசமின்றி சாந்தமான கோபத்துடன் கண்டித்துத் திருத்துதலே தெய்வத்திற்குப் பிரீதியாகும். சிலர் இவ்வித மிருக ஆவேசத்தில் சிறுவர்களின் காலுக்கு இரும்புச் சங்கிலியும் அத்துடன் ஒரு கட்டையும் சேர்த்து விலங்கு இடுவதும் உண்டு. இது இயற்கையில் அச்சிறுவனுக்குள்ள மான உணர்ச்சியை அடியோடு ஸர்வநாசம் செய்துவிடுகின்றது. மான உணர்ச்சியைக் கெடாதிருக்குமாறு செய்தலே ஸன்மார்க்கத்துக்குப் பாதை. மானவுணர்ச்சி குன்றி விடின் பின் எந்தத் தீச்செயல்களுக்கும் நெஞ்சு தேறிவிடும். ஒரு முறை சிறைக்குச் சென்றவர்களுக்கு அந்தக் 'குளிர்' விட்டுப் போய் முன்னிலும் பொல்லாதவர்களாய்விடுதலும் உண்டு. "அவன் சிறை கண்டு வந்தவன்; எதற்கும் துணிந்துவிடுவான்; அவனிடத்தில் அதிக வார்த்தை வேண்டாம்" என்று மானஸ்தர்கள் சொல்லவும், சொல்லி மரியாதையாய் ஒதுங்கிக்கொள்ளவும் பல இடங்களில் கேட்டிருக்கலாம். இவ்வளவுக்கும் காரணம் அந்த மானவுணர்ச்சி சிறைவாசத்தில் மறைவுபட்டுவிட்டதேயாகும். இதை விலங்கிடும் மூர்க்க மிருக ஆவேசிகள் கவனிக்கக்கடவர். இந்த ஸம்பவங்கள் எங்கும் சாதாரணமாய்க் காணும் பிழைகள். ஆயினும், அவற்றின் தீமையை மட்டும் சிந்தித்தவர்கள் சிலரே.

ஃ

---

தெளிந்த புத்தியும் ஞாபகசக்தியும் இல்லாத மாந்தர் பூமிக்கு ஒரு பாரமே.

மிருக ஆவேஸம் மங்களகரமான விவாக காலங்களில் விசேஷம். அதனால் உண்டாகும் ஆக்கிரகம் என்றும் நிலைத்துவிடுகிறது. பெண்ணைக் கொடுத்த இடத்திலும் கொண்ட இடத்திலும் பிரமாதமாகிக் காலமுழுமைக்குமே துவேஷம் சாதிக்கச் செய்துவிடுகின்றது. மாமியார் வைத்த பகைநெஞ்சம் கடைசிவரை மாறுவதேயில்லை. மருமகள் கொண்ட விரோதம் அவளை விட்டு விலகுவதுமில்லை. அந்த விவாகத்திற்கு வந்தவர்கள் சண்டையிட்டுப் பிரிந்தது என்றும் பிரிந்ததே. அத்திருமணத்திற்கு வராதிருந்துவிட்டவர்கள் பொது மனிதர்களாய் உத்தமர்களாகிவிட, பல செலவுகளையும் செய்துகொண்டு அங்கு வந்து கூடியவர்கள் இந்த ஆவேசக் கூட்டத்தில் தாங்களும் கலக்க நேர்ந்து வீணான பகைமையைத் தேடிக்கொள்கின்றனர். விவாகம் காண நெருங்கிச் சூழ்ந்ததற்கு இதுவே இவர்கட்குக் கிடைக்கும் சீதன வரிசை!

ஃ

கூட்டு வியாபாரத்திலும் மிருக ஆவேஸம் மிகுதி. ஒன்றுயிருந்தவர்களுக்குள் சொற்ப விஷயங்களில் உண்டான பகைமை நாளடைவில் முற்றி நியாயஸ்தலத்திற்குச் சென்று, அந்த வியாபாரத்தில் தேடிய அவ்வளவு சொத்துக்களையும் விவகாரத்திற்கே செலவிட்டு இருவரும் பெருங் கடனில் மூழ்குகின்றனர்.

ஃ

பெற்ற தாய் போனபின்பு பெற்ற அப்பன் சிற்றப்பனே. தந்தையோ தன் வீடு சொத்துக்களை மூத்த மனைவியின் குமாரர்கட்குத் தருவதில்லை யென்று மிருக ஆவேசம் கொள்கின்றான். மூத்தமனைவியின் குமாரர்களும் மிருக ஆவேசமாய் “அந்த சண்டாளனைக் குத்திக் கொலைசெய்துவிடுகிறேன்” என்கிறார்கள். இந்தத் தந்தையோ பதிலுக்குப் பதில் அவர்களைக் கொன்று புதைக்காமல் போவதில்லை யென்று தனது நரைத்த—சாயவர்ணம் தடவிக் கருப்பாக்கிய மீசையை முறுக்கிக்கொண்டு ஆரவாரிக்கின்றான். இதன் முடிவு எங்கு கொண்டுபோய் விடுமோ?

ஃ

சகோதரர்களுக்குள் நேரும் பாகசொத்து வகைகளிலும் மிருக ஆவேஸம் தலைவிரித்தாடுகின்றது. குடும்பத்துள் கணவன் மனைவிக்குள்ளும் இந்த மிருக ஆவேசம் புகுந்துகொள்கின்றது. அதிலும் அடங்காத மனைவியுடன் வாழத் தலைவிதி நேர்ந்தோன் எத்துணை விவேகியா யிருப்பினும் பலசமயங்களில் மிருக ஆவேசமே கொண்டுவிடுகின்றான். ஆயினும், தனக்குள்ள அறிவின் பலத்தால் தன்னை யடக்கித் தணித்துக்கொள்ள அவனுக்கு அவ்வப்போது சக்தி

---

என் சரீரத்தை எதிர்க்கலாம், என் கீர்த்தியை எதிர்க்க முடியாது.

ஏற்படுதல் கூடும். அந்த அறிவின் பசையில்லாதவனே, தன்னை அடக்கச் சக்தியற்றவனே தனது மிருக ஆவேசத்தில் தான் இன்னது செய்கிறோமென்பதையே மறந்துவிடுகின்றான். இதில் விளையும் தீமைகள் எழுத்தி லடங்கா. இன்னும் எல்லாச் சமையலும் செய்து கணவனுக்கு இடும் வேளையில் சில மூட மனைவிகள் சிடுசிடுப்புக் கொள்வதில், "இந்தப் பாழும் சோற்றைச் சந்தோஷமாய் இடக்கூடாதா, அவ்வளவு செலவு செய்தேனே" என்று மிருக ஆவேசத்துடன் கோபிக்கிறான். எச்சிற்கையால் தன் வயிற்றிலும் தலையிலுங்கூட அந்த சமயம் அடித்துக்கொள்கிறான்.

ஃ

வீட்டில் ஒரு பக்ஷணம் செய்கிறார்கள்; வீட்டுக்காரனின் கைப்பணம் அதற்கு வேண்டியவரை செலவாகிறது; தயாரான பக்ஷணங்கள் இன்னோரிடத்திற்கு ஏற்றுமதியாகிப்போய், வீட்டிலுள்ளவர்களுக்குக் கொஞ்சமே வைக்கப்பட, வீட்டுக்காரன் அது தெரிந்தும் மவுனமாகிறான். பிறகு அவன் உண்ணும்பொழுது பக்கத்தில் இருப்பவர்கட்கு இன்னும் வையென, கொஞ்சந்தானே இருக்கிறதென்று அதற்குப் பதில் வர, "அவ்வளவு செய்தது எங்கே?" யென்று மிகு ஆத்திரமாய் மிருக ஆவேசம் கொள்கிறான்.

ஃ

விபசார தோஷத்தின்கண் நேரும் மிருக ஆவேசம் வெகு பிரஸித்தம். ஆவதும் பெண்ணாலே அழிவதும் பெண்ணாலே. பக்கத்து வீட்டுக்காரனும் எதிர்வீட்டுக்காரனும் ஒரு சுவர் சம்பந்தமாகவோ, வேறு சில விஷயங்கள் காரணமாகவோ மிருக ஆவேசம் கொண்டு காலமுழுதும் அநுகூல சத்துருக்களாகிறார்கள். "என் வயல்" "உன் வயல்" என்பதில் எவ்வளவோ மிருக ஆவேசம். இவன் அவனுடைய விளைந்த பயிரை அழித்துவிடுகிறான். அவன் இவன் வீட்டுக்குத் தீயிட்டுவிடுகிறான். இருவரையும் அதிகாரிகள் "பெரிய விருந்துச்சாலை"க்கு அழைத்துச் செல்கிறார்கள்.

ஃ

தமயன் ஸாது; தம்பி முறடன்; குடும்பத்திலுள்ளவர்கள் இவ்விருவருக்குள்ளும் பகையை மூட்டிவிடுகிறார்கள். இதில் உண்டாகும் மிருக ஆவேசம் தம்பியை மஹா மூர்க்கனாகவும் வாய்க்கு வந்தபடி பேசும்படியாகவும் செய்துவிடுகின்றது. தமயனுடைய மிருக ஆவேசமோ அவனுடைய சாதுத்தன்மைக்கேற்ப அந்த

---

கையில் துட்டுமிருந்து, நகையில் ஆசையுமிருந்து, கேட்பதை வாங்கிக் கொடுக்கும் புருஷனுமிருந்தால்—என்னதான் செய்துகொள்ளக்கூடாது?

சமயம் தான் பெற்ற நேர்த்தியான அநுபவத்தின் படிப்பினையை உணர்ந்துகொண்டு காலமுழுதுக்கும் தன் மானத்தைக் சாத்துக் கொண்டு ஒதுங்கிவிடும்படி செய்துவிடுகின்றது. பிறகு எவ்வளவு ஒன்றுபடினும் தமயன் மிக்க எச்சரிக்கையுடனேயே நிற்பதால், மறைந்த அன்னியோன்னியம் மறுபடி சந்திப்பதேயில்லை. துஷ்டனை தம்பியிடம் தூர விலகுவதே அவனுக்குச் செய்யும் மரியாதை.

ஃ

மிருக ஆவேசம் ஒருவன் அநியாயமாக அவமானப்படுங் காலையில் எழுகின்றது; நம்பி மோசம்போன இடத்திலும் தோன்றுகின்றது; எவ்வளவு உழைத்தும் பெயரில்லாமற் போகும்போது அங்கும் இது உண்டாகின்றது; வெகுநாள் பொறுத்துப் பொறுத்துப் பார்த்தும் சகிக்க முடியாததாய் விடுகின்ற நிலையிலும் இது தாண்டவமாட வருகின்றது. மிருக ஆவேசம் ஒரு குறித்த சிலருக்கு அவர்களின் ஜென்மத்துடன் பிறந்த குணமாய் இருக்கின்றது. அது தெரிந்து மற்றவர்களும் அதிக வார்த்தை கொள்ளாமலும், எதிர்க்காமலும் ஒதுங்கிவிடுகின்றனர்.

ஃ

தான் வீசிய வஞ்சக வலை, தான் ஏமாற்ற யிருந்த சந்தர்ப்பம் தவறிவிடும்போது இந்த மிருக ஆவேசம் முளைக்கின்றது. நன்றி கெட்ட சிலருக்கு ஒருவன் எவ்வளவுதான் உபகாரியா யிருப்பினும், ஏதோ ஒருசமயம் அவன் உதவத் தவறுவானாயின், உடனே மிருக ஆவேசம் கொண்டு, அவனுக்கு வேண்டாதவர்களின் பக்கம் சேர்ந்துத் தங்களால் ஆனவரையில் கெடுதி செய்யத் துரிதப்படுகிறார்கள். தங்களையே நம்பியவர்களையும், தங்களிடத்து உண்மையன்பு மிகுந்தாரையும் மிருக ஆவேசம் காரணமாகத் துரோகம் செய்ய நினைக்கையில் தாங்களே அதற்குப் பதிலாகக் கெட்டழியவும் நேர்கின்றது. இவர்கள் கெடுக்க நினைத்தவர்கள் அவர்களின் கண்கட்கு முன்பு க்ஷேமமாய் வாழ, அது நோக்கி வயிறு கொதிக்கவும் ஆகின்றது.

ஃ

பெற்றோர்கள் எவரிடத்து அன்புநடிப்புக் காட்டுகின்றனரோ, அவரிடத்தும் அவர் மக்களும் பிரியப் பாசாங்கு செய்கின்றனர். இவர்கள் பின் என்ன கல்வி கற்பினும், அறிவில் தேர்ந்துநிற்பினும், இருபக்கமும் தலையாட்டுவோராய், ஒருவர் சங்கதியை மற்றொருவ

---

ஆசிரியர்கள் நூல் மூகததானும், பத்திரிகா மூகத்தானும் எழுதுகையில் ஜனங்களோடு தாங்கள் வெகு சாமான்யமாகக் கலந்து நிற்கும் பான்மையைக் காட்டிக்கொள்கிறார்கள். அவர்களின் சந்திப்போ—அவர்களைத் தேடிச் சென்றபோதிலும் சுலபத்தில் கிடைப்பதில்லை. கிடைப்பதும் அபூர்வம்.

ரிடம் சொல்லி இருவருக்கும் அன்பினர்கள்போல் நடிப்பவர்களாக மாறி, இன்னும் பல ஈனச்செயல்களிலும் பெற்றோர்களைவிட அதிகமாய் இறங்குகின்றனர். மிருக ஆவேசம் கொண்டோர் இவர்களுடன் பெரும்போரிட்டுப் பகைமை கொள்ள, அறிவின் பசையுள்ளவர்களோ அவர்களின் ஸ்வபாவம் தெரிந்து விலகிவிட, அந்த இழி தகைமையினரும் அதனை யுணர்ந்து ஒதுங்கிவிடுகின்றனர்.

ஃ

தான் யதார்த்த அன்பும், விஸ்வாசமும் கொண்ட இடத்தில், அந்த அன்பையும் விசுவாசத்தையும் காணாதபோது நெஞ்சு பொறுக்கொணா வேதனைகொண்டு மிருக ஆவேசத்தில் உக்கிரகப்படுகிறது. இவ்விதமே தான் நம்பிய நண்பர்கள் வெறும் வேஷக்காரர்களாகிவிடுகையிலும் மிருக ஆவேஸம் உதயமாகின்றது. நம்பிய வழக்கமான கடைக்காரனே பந்துவோ ஏமாற்றிவிடுகையிலும் மிருக ஆவேசம் எதிர்படுகின்றது. **ஆனால், இது முதல்தடவையின்போதுதான் உண்டாகும்.** தான் நம்பியவர்களின் பசுத்தோல் போர்த்த தன்மையும், பொன்முலாம் பூசிய மேற்பூச்சும் தெரிந்துவிடுவதால், அடுத்த தடவையில் தாங்கள் பட்டும் படாமல் நடந்துகொண்டு சாதாரணமாகிவிடுகிறார்கள். அன்று தொட்டு ஆரம்பத்திற்கொண்ட அன்பு, விஸ்வாசம், நம்பிக்கை, நட்பு, உறவு யாவும் வெறும் அறிமுகத் தன்மையில் திரும்பிக்கொள்கின்றன.

ஃ

மிருக ஆவேசம் சிலரிடத்து உதிக்கும்போது அது மூர்க்கத் தன்மையின் காரணமாகவும் உண்டாகலாம்; மமதையினாலும், கர்வித்துப்போயுள்ள நிலையாலும் நேரலாம்; தனக்கு நிகர் எவர் என்ற அகம்பாவத்தாலும் வரலாம்; துரோக புத்தியாலும், தெய்வ பயத்தையும், நீதி நியாயங்களையும் மறப்பதாலும் எதிர்படலாம்; தனது இழிந்த தன்மையாலும் ஸம்பவிக்கலாம்; நன்றி மறந்த வகையிலும் காணலாம்; பழக்க சகவாசங்களாலும் விளைதல் கூடும். இது ஒரு வகை. இவற்றை மன்னிப்பதற்கு எவராலும் இயலா. கடவுள் தான் க்ஷமிக்கவேண்டும்.

ஃ

மற்றொன்று வேறொரு வகை. தந்தை தருவதற்கு மறுக்கும் பாகசொத்தைக் குமாரன் வேண்டி மிருக ஆவேசம் கொள்ளுதலும், தான் அன்பாய் நடந்தும், தன் மனைவி, பந்துக்கள், நண்பர்கள், தன் உதவி பெற்றவர்கள் அதற்கு எதிர்மாறாக ஆகும் வேளையில் மிருக

---

நூலாசிரியனை, அவன் எழுதிய இன்பக்கட்டுரைகளே அதன் இன்பத்தில் மயங்கும்படி பரவசப்படுத்திவிடுகின்றன. ஜனங்கள் ஆசிரியர்களை மதிப்பது அவர்கள் இறந்தபிறகு. நூல்களை மதிப்பதோ கிடைக்காதபோது.

ஆவேஸங் கொள்ளுதலும் இவைபோன்றன வெல்லாம் தர்ம தேவதையின் இரக்கத்திற்குரியவை. இந்த வகையில் மிருக ஆவேசம் கொள்வோர் கடவுளை நம்பித் தமது ஆவேசத்தைத் தணிப்பித்துக்கொண்டு, உலகின் போக்கு இவ்வாறுதானெனத் தெளிந்து அடக்கத்துடன் நடக்கப் பயிலுதல் வேண்டும். "அடக்கம் ஆயிரம் பொன் பெறும்" என்பதை அன்னோர் தமது பிந்திய வாழ் நாட்களில் இறைவன் அருளால் உணர்ந்துகொள்ள முடியும். இயன்றவரை மிருக ஆவேசமின்றியே நமது வாணாள் நடை பெறுக. மீறி நம்மையே அறியாவாறு மிருக ஆவேசம் உதித்துக் கொண்ட வேளையில், "ஓ! இது மிருக ஆவேசம்; இது கொடு மைக்கும், கொலைக்குங்கூடத் துணிந்துவிடும்; இது தகாது; இதை நாம் இந்த சமயம் விட்டுவிடுவதே சரி"— என்று நமது மனதைச் சாந்தப்படுத்தி அடக்கிவிடப் பழகுவோமாயின், நமது வாழ்நாள் நலம்பெற அமைதல் கூடும். கடவுளை நம்பினோர் கைவிடப்படார்.

**செய்வன தவிர்வன தேர்ந்திடுக.**
**உய்வகைநாடி யுளமதி ஞேர்ந்திடுக.**



## அங்கு அதை ஏன் சொல்லவோ?



உன் வீட்டில் உண்டான ஒரு சச்சரவில் நீ கொதித்தெழுந்த கோபத்தையும், நொந்துபட்ட உன் நெஞ்சின் புண்ணையும், அச்சமயம் நீ உன் தலையிலும் வயிற்றிலும் அடித்துக்கொண்டு ஆத்திரப்பட்டதையும், சகிக்க இயலாத வேதனையையும் உனக்குள்ளேயே அது குடும்பவிஷயமென்றும் தலைவிதி யென்றும் கருதி ஜீரணித்துக் கொள்ளப் பழகு. அந்தச் சமயம் அங்கு வந்து உட்காரும் ஆணோ பெண்ணோ எவரிடமோ அதை நீ ஆத்திரத்துடன் சொல்லப் போய் விடாதே. அவர்கள் உன்னைச் சமாதானப்படுத்த, அதில் நீ தேறிச் சாந்தப்பட எண்ணாதே. வந்து உட்கார்ந்தவர்கள் இருபக்கமும் ஹிதமாய்ப் பேசி வீட்டின் அலங்கோலக் குப்பையைத் தெரிந்து கொள்ளுகிற தந்திரசாலிகளான தலையாட்டிப் பொம்மைகளாவர். இந்த வெட்டிப் பொம்மைகளிடம் உன் குடும்பச் செய்திகளைக் கூறி அவர்களுக்கு ஒரு மதிப்புத் தாராதே. நீயும் அவர்களிடம் உன் எரிச்சல்களை அவிழ்த்து உன் மதிப்பைக் குறைத்துக்கொள்ளாதே. வந்து உட்கார்ந்தவர்களுக்கு உன்னைப்பற்றிய வீந்தச் சங்கதியும் மெல்லுவதற்குக் கிடைக்காமல் எழுந்துபோகச் செய்து அவர்களை ஏமாற்றிவிடு.

# லோபனும் அவன் மனைவி வாஞ்சையும்.

கண்ணிகள்.

லோபன் :—இந்தப் பட்டுச்சேலை யேதடி பளபளவென்குதே சொல்லடி வாஞ்சையே.

வாஞ்சை :—வந்த ஆடி நோன்பென் அப்பன் வாங்கித்தந்த வரிசை லோப மணவாளரே.

லோபன் :—வரிசையேனும் பேழை வைத்திடாமல் அதை மண் புறட்டலாமோ வாஞ்சையே.

வாஞ்சை :—நீர்—தருவதோயில்லை யிதுபோனால் வேறொன்று தருவார் லோப மணவாளரே.

லோபன் :—நான் தாராமல் தங்கநகை யுனக்கேதடி நட்டணை பேசுறாய் வாஞ்சையே.

வாஞ்சை :—நகை தேய்ந்துபோமென்று கழட்டிக்கொண்டீரே சிறந்த லோப மணவாளரே.

லோபன் :—பூட்டிய நகை யேது ? அடகினில் வந்ததுபோல யிருக்குது வாஞ்சையே.

வாஞ்சை :—ஆட்டு மிவையெல்லாம் அப்பன் போட்ட நகை அல்லவோ லோப மணவாளரே.

லோபன் :—ஆரதானாலென்ன புடவையை விற்கலாம் அதிக விலைக்கடி வாஞ்சையே.

வாஞ்சை :—பாரப் பட்டுடுக்கக் கண்டு பொறுக்கில்லையோ பகரும் லோப மணவாளரே.

II

லோபன் :—

1. சொன்னால் கேளடி மனம் சுழிக்கவேண்டாம்
   பட்டுத்தா னழுக்குப் புறண்டு போகும்
   பின்னே வாஞ்சையே இது விலைபெற்ற சேலையடி
   சலவைக் குதவாதடி.

2. உரிய உன்னப்பன் இதை உனக்குத் தந்திட்டபோதே
   எனக்குச் சேர்ந்தது தானே.
   பிரியம் என்னடி சேலை பிலுக்கக் கட்டுவதிலே
   கிடைப்பதென்னடி லாபம்?

---

நீ காட்டுகிற விலகிய தன்மைக்கு நான் காட்டுகிற விலகிய தன்மை கொஞ்சங்கூட இளைத்ததல்ல. எத்தனையோ ஆயிரம் விலகலில் இது ஒன்று.

3. அவிழ்த்துப் போடடிபோய் வேறுடுத்துக்கொள்
 பிடித்திதை மடிக்கலாம்
 உவப்பாய் விற்கலாம் இனி ஒருவர்க்கும் தெரியாமல்
 மறைவில்லிருக்குதென்றே.

4. ஒரு சேலையிலே பொன்னூறுட் கிடந்தால்
 அதனாலே வட்டி நட்டமாகுதடி
 இருக்க யிருக்கப் பட்டு இதுங் கிழிந்து போய்
 விட்டால் முதலுக்கே மோசமடி.

சொன்னால் கேளடி மனம் சளிக்கவேண்டாம்.

## முதல் கோணல் முற்றும் கோணல்!

ஒரு வேலையாக ஓர் இடத்திற்குப் புறப்பட்டு முதலில் ஒரு இட்டிலிக் கடையில் பசிக்காகக் காசைத் தர, எவ்வளவோ இட்டிலி இருந்தும், "அது மொத்தமாக ஒருவருக்குத் தந்து விடுவதற்காகும்— உங்களுக்குப் பிறகுதான் தர முடியும்" என்று சொல்லிவிட, வருந்திப் பசியுடன் செல்லுவது முதல் கோணல். பிறகு ஜட்கா வண்டிக்காரன் 2-அணுவுக்கு 5-அணு வாடகை கேட்க, அதற்கு மறுத்து நடந்து செல்ல, வழியிலே பெருமழை பிடித்துக்கொள்ள, ஒரு நதியின் அருகே வழுக்கி விழுதல். பிறகு எண்ணி வந்த இடம் போக அது மூடிப் பூட்டு போட்டிருத்தல். பிறகு தன் கூட்டாளியிடம் வர, அவனே தன்னைக் கூட்டு வியாபாரத்திலிருந்து விலக்கிக் கணக்கைத் தீர்த்துக் கொள்ளும்படி சொல்லுதல். பிறகு மாமி வீடு சென்று மனைவியை யழைக்க அவள் "வரமுடியாது" என்று மறுத்தல். வற்புறுத்தி மனைவியைத் தன் வீட்டிற்கு அழைத்துவர, அவள் சமைக்காமல் பாய் போட்டுத் தூங்கல். எழுப்பினும் எழுந்திராமை. பிறகு புருஷன் மனைவி கலகம்; அலங்கோலம். இது முதற் கோணலினலா? அல்லது புறப்பட்ட வேளையின் கோணலாலா? அல்லது விதிவசத்தாலா? எதனல்?

எத்தனையோ நண்பர்களை இழந்திருக்கிறோம். இந்த அதிகப் பிரசங்கி தோலைந்தால் அது ஒரு பெரிதா? இவ்வளவு சீக்கிரம் குணம் தெரிந்ததே அதுவே பெரிய நன்மை. இத்தகையோர் குறைவதே நலம்.

ஒருவேளை நம்மைக் கொல்வோரையாவது க்ஷமிக்கலாம். நமது நற்பெயரை மாய்ப்போரைமட்டும் எந்த நாளிலும் மன்னிக்க முடியாது.

# வாழ்நாளில் உன்னத நிலை

## உன் வாழ்நாளை எப்படி உன்னத நிலைக்குக் கொண்டுவர முடியும்?

(78-ம் பக்கத் தொடர்ச்சி.)



இல்லற வாழ்க்கையைசந்தோஷமாக நடத்த வேண்டுமென்றால் சரியான மனையாள் அமைந்திருத்தல் வேண்டும். இதில் உன் முக்கிய கவனத்தைச் செலுத்து. ஆனால், இக்காலத்தில் 'பணம்' முக்கியத்திற்கு வந்து, அதை ஒன்றையே நாடிப் பெண்ணின் படிப்பையோ, குணத்தையோ, ஒழுக்கத்தையோ எதையும் சிறிதேனும் கவனிப்பதில்லை. ஒழுங்காக இருப்பதற்கு—ஒத்த குணமும், ஒத்த ஒழுக்கமும், ஒத்த நடையும் இருத்தல் வேண்டும்.

ஃ

தன்னம்பிக்கை என்பது உன்னுடைய பிராண வாக்கியமாக இருக்கட்டும். உன்னால் கூடிய வரைக்கும் எல்லாவற்றையும் நீயே உன்னுடைய கையால் நடத்த முயற்சி செய்ய வேண்டும். கணக்கற்ற வேலைக்காரர்களால் நீ சந்தோஷமடைய முடியாது. வேலைக்காரர்கள் உனக்கு வேண்டும் என்றால், நீ எப்போதும் எதற்கும் அவர்களை நாடி நிற்க வேண்டி யிருக்கும். பிறகு அவர்களே உனக்கு அதிகாரியாவார்கள். உன் வேலையை ஒழுங்காகச் செய்து முடித்ததும், உன்னுடைய வாழ்வைச் சரியான மார்க்கத்தில் நடத்திச் செல்ல வேண்டும். சுறுசுறுப்புள்ள மனிதனுக்கு எதையும் செய்வதற்கு நேரம் எப்போதும் அகப்படும்.

ஃ

ஒரு சிறு காரியத்திற்காக உன் உடம்பை அலட்டிக்கொள்ளாதே. பல பல அற்ப, கெட்ட காரியங்களில் பிரவேசிப்பது அவற்றால் உண்டாகும் தொல்லை ஆளைக் கொல்லும். உனக்கு ஏற்படும் ஆபத்துக்களை நீக்குவதற்கு உன்னால் முடியும் வரையில் முயற்சி செய். அப்படியும் அந்த ஆபத்தில் நீ சிக்கிக்கொள்ள நேரிடில் அதைப் பொருட்படுத்தாதே. சற்சங்கத்துடன் சேர். 'உன்னுடைய சிநேகிதர்களைச் சொல். நீ இப்பேர்ப்பட்டவன் என்பதைச் சொல்லுகிறேன்.' என்பது சிறந்த பழமொழி.

ஃ

உன்னுடைய இனத்தார் மாத்திரமின்றி மற்றவர்களுடைய கஷ்டத்தையும், துன்பத்தையும், பிராணிகளுடைய துன்பத்தையும் ஒழிக்க முயற்சி செய். இதற்குச் செலவழிக்க உன்னுடைய சம்பாதிப்பில் கொஞ்சம் எடுத்து வை. உண்மையான சந்தோஷம் உன்னுடைய மனைவி மக்களைச் சந்தோஷப்படுத்துவதில் மாத்திரம் பொருந்தி யிருக்கவில்லை; மற்றவர்களையும் சந்தோஷப்படுத்து

---

பொறுமைக் குணம் ஒன்றை இகழ்வதா யிருப்பினும், இகழ்பவனின் உள் மனம் அதன் சிலாக்கியத்தை ஒப்புக்கொண்டு மதிக்கும்படியே செய்கிறது.

வதிலும் பொருந்தி நிற்கிறது. இதற்குப் பணமே வேண்டியதில்லை. உன் மனத்தாலும், வாக்காலும் பிறரைச் சந்தோஷப்படுத்தலாம். ஆனால், நீ நன்மை செய்யும் தயாள மனது படைத்தவன் என்று தெரிந்ததும், பல அண்ணாத்தைகள் எப்படியாவது தாங்கள் சொழுக்கவேண்டி உன்னை அடைவார்கள். இதில் நீ ஏமாறுதல் கூடாது. தக்கவர்க்கே நன்மை செய்தல் வேண்டும். அன்னோரே உன்னைக் கடைசிநாள் பரியந்தம் மனப்பூர்வமாக நேசிப்பர். இந்தப் பரோபகார குணத்தை உன்னுடைய இளம் பிராயம் முதற்கொண்டு பயிற்சி செய்ய முற்பட வேண்டும். அப்படி இந்தக் குணத்தின் விதையை நீ இளமையிலேயே உன் மனதில் நட்டுவிட்டால், பிற்காலத்தில் அது வளர்ந்து, செழித்து நலம்பெற்றுப் பெரியப் விருக்ஷமாக ஓங்கும்.

ஃ

இதனுடன் ஒரு காரியத்தைத் தொடங்கும்போது 'இதைக் கண்டிப்பாக முடித்து 'ஜெயிப்போம்' என்ற மன உறுதியும், அப்படிச் செய்யப் புகுந்த காரியத்தில் குன்றாத ஊக்கமும் இருக்கவேண்டும்.

ஃ

எளிய வாழ்வும், பெரிய புத்தியும் உன் உன்னத வாழ்க்கையின் மார்க்கக்கல்லாக இருக்கவேண்டும். எளிய வாழ்வு ஒவ்வொருவரிடமும் அமைந்து இருக்கிறது. பெரிய புத்தி பலரிடம் அமைந்திருக்கவில்லை. அப்படி இருக்க முயற்சி செய்தாலும் கிட்டுவது அசாத்தியமாக இருக்கிறது. பெரிய புத்தியை அடைவதற்குப் படிப்பு தேவை. படித்த வழி நிற்பதிலும், படித்ததைச்சிந்திப்பதிலும், ஒரு காரியத்தைச் செய்வதற்கு முன் நன்றாக யோசனை செய்வதிலும், ஒழுங்காக நடப்பதிலும், பெரிய புத்தியைக் காண்பித்துக்கொள்ள வேண்டும். இவைகளையெல்லாம் உன் மனதில் கொண்டு நடப்பாயானால் உன் வாழ்நாளை உன்னத நிலைக்குக் கொண்டு வர முடியும். அது உன் கையிலேதான் கிடக்கின்றது. உன்னிடத்தில் மாத்திரமேயன்றி மற்றவரிடமும்மறைவாகத் தவழ்ந்து விளையாடுகின்றது. ஆனால், அதைப் பொருட்படுத்தி அதன்படி நடப்பதுதான் கிடையாது. இந்தக் காரியம் செய்ய முற்பட்ட சில மாதம் வரையில், ஏன், சில வருடங்கள் வரையிலும் கஷ்டமாகத்தான் இருக்கும். இருப்பினும், விடா முயற்சியுடன் அதன்படி நடக்க முயல். முயற்சி செய். இன்றே செய். நலனை விரைவினில் காண்பாய்.

P. G. குலசேகரம்.


பத்து வருஷங்கட்கு முந்திய டயரியை இன்று எடுத்துப் பார்ப்பின், அதில்—"அந்தப் படுபாவி என்னை வஞ்சித்ததன்றி என் மானத்தையும் கெடுத்துத் தூற்றியிருக்கிறான்; இவனுக்கு அழியுங்காலம் நேர்ந்ததா!" என்று கதறிய வரிகள் தென்படுகின்றன. வஞ்சித்த சண்டாளர்களோ தங்கள் ஐச்வரியம் வாழ்வு கடன் வாழ்வாகிவிட யாவும் ஜப்தியாகி, பல பல விதமாகி, அவர்களும் மாண்டு மண்ணாக இன்று தெரிகிறது. வயிற்றெரிச்சல் வீண்போகாது.

# பதங்களின் சேர்க்கை.

உபாத்தியாயர் மாணுக்கருக்கு இம்மொழிகளி லொன்றை எடுத்துச் சொல்லி அதற்குப் பகுதி முதலியவற்றைக் கேட்க வேண்டும். இம்மொழிகளை அப்பியாசிப்பதினுல் எவரும் விரைவில் தேர்ச்சி யடைவர்.

1. ஸ்நாநம், ஸ்நா (சுசி) முழுகுதல்.
2. ஜாதி, (ஜா—பிற) குலம்.
3. அஸ்தலாகவம், (அஸ்தம்-கை) x இலாகவம். (இலாகு—சமர்த்து.) கைசாமர்த்தியம்.
4. அகங்காரம், (அகம்—தான்) x (காரம்—செய்தல்) கருவம்.
5. அசட்டை, (அ—அல்ல) x சட்டை—கனம்) மரியாதை யின்மை.
6. அசத்து, (அ—அல்ல) x (சத்து—மார்க்கம்) துன்மார்க்கம்
7. அசமயம், (அ—அல்ல) x (சமயம்—காலம்) தகுதியில்லாக் காலம்.
8. அசம்பாவிதம் (அ—அல்ல) x (சம்பாவிதம்—சம்பவித்தல்) சம்பவிக்கக்கூடாதது.
9. அசம்பிரேக்ஷிய காரியத்துவம், (அ—அல்ல) சம்பிரேக்ஷியம்—ஆராய்ந்தறிந்தது) (காரியத்துவம்—செய்கை) ஆராய்ச்சியின்றிச் செய்தல்.
10. அசாத்தியம், (அ—அல்ல) x (சாத்தியம்—கூடாதது.) செய்யக் கூடாதது.
11. அசுவமேதம், (அசுவம்—குதிரை) x (மேதம்—யாகம்) குதிரை யாகம்.
12. அதிமதுரம், (அதி—மிகவும்) x (மதுரம்—மிக்க சுவை) ஓர் மருந்துப் பதார்த்தம்.
13. அத்தியந்தம், (அதி—மிகவும்) x (அந்தம்-கடைசி) அளவு கடத்தல்.
14. அநர்த்தம், (அந்—அல்ல) x (அருத்தம்—பயன்) பயனின்மை.
15. அநாதரவு, (அந்—அல்ல) x (ஆதரவு—நிலை) நிலையின்மை.
16. அநுகூலம், (அநு—கூட) x (கூலம்—சித்தி) காரியசித்தி.
17. அநேகம், (அந்—அல்ல) x (ஏகம்—ஒன்று) பல.
18. அந்தணன், (அம்—அழகு) x (தண்மை—குளிர்ச்சி.) பிராமணன்.
19. அபகாரம், (அப—கெட்ட) x (காரம்—செய்கை.) தீமை.
20. அபகீர்த்தி, (அப—கெட்ட) x (கீர்த்தி—புகழ்.) கனவீனம்.
21. அபயம், (அ—அல்ல) x (பயம்) அடைக்கலம்.
22. அபாயம், (அப—அல்ல) x (அயம்—அதிர்ஷடம்) இடையூறு.
23. அபூர்வம், (அ—அல்ல) x (பூர்வம்—முன்) அருமை.

---

...வாம்ஸம் பெற்றவர்களென்று ஒரு சிலரைக் குறிப்பிடலாம். ஆனல், ...க வகுப்பாரை முழுமையுமே கடவுளின் அம்ஸம்—மஹா...ம்பு—என்று ஸ்தோத்தரிப்பது சரியாகாது என்கிறார் ஒருவர்.




# ஏகநாதன்

## V

முன் குறிப்பு:—தோட்டியும், தோட்டியின் மனைவியும் தீண்டாமையைக் குறித்துப் பேசி முடித்த சமயம், ஏகநாதனின் வீட்டில் சிரார்த்தத்திற்காகச் செய்த சமையலின் நறுமணம் தோட்டிச்சியின் மனத்தைக் கவர, அத்துடன் அவளுக்குப் பசியும் தோன்ற, ஏதாவது ஏகநாதனின் வீட்டில் கேட்டுக்கொண்டு வந்து தருமாறு கணவனை வேண்டுகிறாள். அதற்கு அவன், "அடி பைத்தியமே! பார்ப்பனர் வீட்டில் தோட்டிக்கு உணவு கிடைக்குமோ" என்கிறான். "என் பசி பொய்யோ, காதை அடைக்கிறதே" என்கிறாள் தோட்டிச்சி. அதற்கு அவன், "பசி பலவிதமுண்டு; இப்போது உன்னை அடுத்துள்ள பசியைத் தீர்க்க முடியாது; முடியாவிடினும் ஆபத்து ஒன்றுமில்லை" என்கிறான். அதற்குத் தோட்டிச்சி "இவ்விதமான மணமிகுந்த உணவை என்றும் கண்டதில்லை" என்கிறாள். "என் பிரார்த்தனையைக் கடவுள் கேட்கமாட்டாரா? இந்த பார்ப்பன ஆண்டவன் இரங்குவது எப்போதோ?" என்கிறாள். அதற்குத் தோட்டி, "மூடப் பெண்ணே! மனஸ்பூர்வமாய் அன்போடு செய்யும் இன்புள்ள வணக்கம் என்றும் வீண் ஆனதில்லை" என்கிறான். இச்சமயம் இவ்விருவருடைய சம்பாஷணைகளையும் கேட்ட ஏகநாதன் எவ்வுயிரும் தன் ஸகோதரமெனக்கொண்டு, தன் மனைவிக்குத் தோட்டிச்சியின் விஷயத்தைத் தெரிவிக்க அவளும் ஒப்பவே வீட்டிலிருந்தும் வெளி வந்து தோட்டியையும் தோட்டிச்சியையும் மிக்க வணக்கத்துடன் சிரார்த்தத்தின் அதிதிகளாய் உண்ணுதற்கு வருமாறு வேண்டி வீட்டிற்குள் அழைத்துச் செல்கிறான். தோட்டியின் மனைவி இதைக் கண்டு, "இதென்ன அதிசயம், இத்தகைய புண்ணியசீலரும் உலகில் உண்டோ" என்கிறாள். அதற்குத் தோட்டி "அன்புடன் செய்யும் பிரார்த்தனை வீண் போவதில்லை" என்கிறான். பின், தோட்டியும் அவன் மனைவியும், அவனைச் சேர்ந்தவர்களும் சிரார்த்தத்திற் சென்று சமைத்தவற்றைத் திருப்தியாக உண்டு பசியாறி ஏகநாதனின் குணசீலத்தைப் போற்றுகின்றனர். ஏகநாதனே யாவரும் கடவுள் மக்கள் என்னும் உயரிய ஞானி.

இதுவரையுள்ள கருத்துகளைப் பின்வரும் பாடலிற் காண்க.

---

ஒரு பெரிய காரியத்தை வீரத்தனமாய்ச் செய்யப்போவதாய் [illegible] வார்த்தைகளைக் கொட்டி அதில் ஒரு பிரஸித்தியைக் கொள் [illegible] பிறகு அந்தக் காரியத்தைச் செய்வதே யில்லை. தமது பெயரை [illegible] பத்திரிகைகளில் விளம்பரப்படுத்தச் சிலர் செய்யும் வேலை இ [illegible]

# ஏகநாதன்

தோட்டி மனைவி:—ஐயவென் நாயக அயலுள பார்ப்பான்
அடுக்களைப் புறத்தே அடுக்காய் இருக்கும்
அற்புத உணவின் நறுமணம் என்னை
நிற்பதற் கிலாது சொற்பமேனு முண்க
என்றே அழைத்து எனக்குளப் பசியை
இன்னும் எழுப்பித் துன்பப் படுத்துதே
கவளமே ஆயினும் கொள்வன் உடனே

தோட்டி:— அவலட்சணமே! அடைந்தனை பைத்தியம்!

தோட்டி மனைவி:—கள்ளமோ ஐயனே! கடும்பசி காதை
அடைக்குதே—

தோட்டி:— அடைக்கும்! பசியிற் பலவுள
அடுத்துள விப்பசி அடையா வோன்றே
அடைக்கா விடினும் ஆபத் திலையே

தோட்டி மனைவி:—கடந்தநம் வாழ்வில் கண்டதே இல்லை
சுவைதரு உணவை—

தோட்டி (இகழ்ச்சியாக):— சோர்ந்தனை பாபம்!
உண்டும் படுத்தும் உறங்கவோ யாமும்
கொண்டன மிவ்வுரு கூறுய் நீயும்

தோட்டி மனைவி:—ஆயினும் ஆண்டவன் காயினுங் கடையகம்
பிரார்த்தனை ஒன்றையும் பேணிஞ ரில்லை
ஆய்ந்திடில், குற்றம் அவர்பாற் கிடையா
ஆலய மக்கள் அவர்செய் வேலை
காலை மாலை கடும்பகல் நேரம்
அசைத்திடும் மணிபல இசைத்திடும் சாத்திரம்
மந்திர தந்திர எந்திரச் செய்கையும்
மணங்கமழ் சூடமும் மண்டும் புகையும்
தீபா ராதனையும் தாளமும் மேளமும்
எங்குங் கேட்குஞ் சங்கத் தொனியும்
கடவுளை நோக்கிக் கழறும் பிரார்த்தனை
திடமாய்ச் சேரத் தடையாய் இவையோ
இருப்பன? எவ்விதம் இசைப்பினும் இரங்கலை
அருளலை பார்ப்பன ஆண்டவன் நமக்கே!

---

*சிலர், கடிதத்தில் கோபமும் கண்டிப்பும் உணர்த்தி நேரில் மிக்க அன்பராய் விளங்குவர். வேறு சிலர், கடிதத்தில் அன்பும் நேரில் பாசாங்கும், நடிப்பும், வியாபார நேசமும், விலகலும் காட்டுவர்.*

தோட்டி :— அறிவிலா மாதே! அறியா திவ்வழி
புகன்றாய், கடவுளைப் புனிதரேன் பரனை
அகத்திடைக் கொள்ளா தாலய மக்கள்
அவருடைச் செய்கை அசைந்திடு மணிடல
பவப்பிணி போகப் புகன்றிடுந் தோத்திரம்
யாவும் கடவுளை மறக்கச் செய்வன
எனநீ கூறிய குணமிலா வார்த்தையால்
அன்றெனை அறிவாய்: கன்றிய மனத்தோடு
கடவுளைத் தொழாது சடத்த லொன்றே
தடையாய்த் தோன்றுவ

தோட்டி மனைவி :— அடைகுமோ அவர்பால்
பசியால் தவித்திடும் பாவியர் சேபமும்?

தோட்டி :— அசிபோ லரித்திடும் கசிவோடு இசைக்கும்
தோத்திரம் எவையும்—

தோட்டி மனைவி :— ஏத்துமேன் தோத்திரம்
பலவும் பக்தியில் நிலவிய தாகும்—

தோட்டி :— அன்போடு புரியும் இன்புள வணக்கம்
என்றும் வீணே ஆனதும் இல்லை—

(இது சமயம் ஏகநாதன் தன்னுடைய வீட்டிலிருந்து வெளி வருதல்)

ஏகநாதன் :— வருக! வருக! சகோதர! வருக!
வளமா என்மனை உளவும் மனையோடு
மக்களுஞ் சேர மகிழ்வா நீவிர்
அனைவரும் ஊண்கொள அன்பாய் அழைத்தனள்
இப்பெருந் தினத்தில் இயல்பா யாமும்
எம்முடைப் பெரியர் எழில்நிலை அடைய
இயற்றுவம் சிரார்த்தம் ஐயநீர் வருவீர்

(என ஏகநாதன் இயம்பித் தோட்டியையும் அவன் மனைவியையும் வீட்டிற்குள் அழைத்து ஏகுதல்.)

தோட்டி மனைவி :—என்னை அதிசயம்! இவர்தம் செய்கை
பொன்னினும் உயரிய முன்னெடுங் காலநற்
புண்ணிய சீலராம் தண்ணிய குணத்து
முன்னவா போல இன்னார் உளரோ?

தோட்டி :— அன்போடு செய்யும் உன்னதப் பிரார்த்தனை
ஒன்றுமே தவறுதல் இன்றாம் அறிவாய்
பேதாய்! வீணாய் பிதற்றினாய் பெரிதே!

[தோட்டியும் அவனைச் சேர்ந்தவர்களும் சிரார்த்த போஜனத்தைப் பசியாற வுண்டு ஏகநாதனை வாழ்த்திச் செல்லுகின்றனர். கபடமற்ற இந்த எளியவர்கள் உண்டதற்குப் பகவானும் சந்தோஷிக்கிறார்.] மு. துரைப்பிள்ளை.




1. அது வீண் போகாது:— தான் தன்னுடைய பெண்ணை விவாகம் செய்து தருவதாகப் பசப்பி அவ்வாலிபனிடமிருந்து பல வீண்செலவுகளில் பணத்தை விரயம் செய்ய வைத்துவிடுகிற பெண்ணின் பெற்றோர்களைப்பற்றி அவன் மிகுந்த நம்பிக்கை கொண்டிருக்கிறான். கல்யாண மாதம் வந்ததும் தன் பெற்றோரை ஏவிப், பெண்பேசி முடிவு செய்துவரும்படி அனுப்ப, முன்பு இவனிடம் பணம் பறித்த அந்தப் பெண்வீட்டுக்காரர்கள் "பெண் தர முடியா"தென்று கண்டித்துக் கூறியனுப்பிவிடுகிறார்கள். பாவம் இவர்கள் ஏதும் பேச வகையின்றி மவுனமாகத் திரும்ப நேரிடுகிறது. தம்முடைய பதிலைக் கேட்டதும் இவர்கள் மவுனமாகத் திரும்பிவிட்டதைப்பற்றியும், அவ்வாலிபனுடைய பணத்தைச்செலவழிக்க வைத்தபிறகு அவனை ஏமாற்றிவிட்டதைப்பற்றியும், இவர்களை ஏமாற்றவைத்த அந்த வஞ்சகர்கள் மனம் பூரிக்கின்றனர். ஆனல், நம்பியிருந்து ஏமாறிய அப்பேதை வாலிபன் வெறுமனே யிருக்கவில்லை. தன் கைப்பொருள் செலவானதைப் பற்றியும், தன்னை அவர்கள் வஞ்சித்ததைப்பற்றியும் கடவுளிடம் ஸதா முறையிட்டுக்கொண்டே யிருக்கிறான். அந்த முறையீடு ஒருகாலமும் வீண் போகாது. அது பின்னுக்குத் தெரியும்.

2. கடைக்காரனின் கபட வார்த்தை:—இன்று அந்த ஆசாமிக்குப் பணம் கட்டவேண்டிய வாய்தாநாள். குறித்த பணம் சேரவில்லையே என்று ஏங்கியிருக்கும் சமயம் இவருடைய அதிர்ஷ்டத்தின் பயனாக அந்த ஆசாமி வராமலிருந்துவிட நேரிட்டு மறுதினம் வந்ததும் உங்களுக்குத் தரவேண்டிய பணம் நேற்றே தயாராக வைத்துக்கொண்டு வெகுநேரம்வரை தங்களை எதிர்பார்த்துக்கொண்டிருந்தேன் என்று மிகு டம்பமாகப் பேசிவிடுகிறார். இவருடைய கபட வார்த்தையை உண்மையென எண்ணிய அந்த ஆசாமி இவர்களைப்பற்றி மிகவும் நம்பிக்கை கொள்ளுகிறார்.

3. அது முடிகிறதில்லை:—ஜனத்திரள் அதிகமாயுள்ள கும்பலில் நாம் தேடிக்கொண்டிருக்கும் மனிதர் நம் அருகிலேயே யிருப்பினும் கூட அவர்களைச் சுலபத்தில் கண்டுபிடிக்க முடிகிறதில்லை.

4. ஆரம்ப ஆசிரியரின் அகமகிழ்வு:—முதன்முதலாக ஒரு வியாசத்தைஎழுதிப்பத்திரிகைக்குஅனுப்பிவிட்டு அது வெளிவரும் நாளை எதிர்பார்த்து வந்ததும் பத்திரிகையைப் பிரித்துத் தான் அனுப்பிய விஷயம் பிரசுரமாயிருப்பதை நோக்கும் காலத்தில் உண்டாகும் மனமகிழ்ச்சியை என்னவென்று சொல்வது? மேலும், தான் எழுதியதிலுள்ள பிழைகளை ஆசிரியர் திருத்திப்பிரசுரித்திருந்தால் அப்பொழுது உண்டாகும் ஆனந்தத்திற்கு எல்லையுண்டா?

---

துஷ்டர்களின் அருகிலும், பொறாமைக்காரர்களின் ஸமீபத்திலும் இருப்பதைவிடத் தூர இருக்கப் பார்ப்பது நலம் செய்யும்.

5. இரண்டுக்குமுள்ள பேதம்:— தன் சொந்தப் புஸ்தகத்தை வாசிக்கும் ஒருவர் அதைக் கையிலேந்தி வாசித்துக்கொண்டிருக்கும் நேர்மையும், இரவல் பெற்று வந்து வாசிப்பவர் கையிலேந்தி வாசிக்கும் நேர்மையும் கவனித்தால் அதிக வித்தியாசம் காணலாம். [இரவல் புஸ்தகமாயின் படிப்பதில் அதிக சிரத்தையும், 'சீக்கிரம் திருப்பிக்கொடுக்கவேண்டுமே' என்பதால் வாசிப்பில் மிகுதியான சுறுசுறுப்பும் இருக்கும்போலும். ப-ர்.]

6. இதை அறிவார்களா?:— கல்யாணமான மாப்பிள்ளை உடம்பு புஷ்டியாகக் காணோமே யென்று அந்த மாப்பிள்ளையைப் பார்த்துப் பேசிக்கொள்ளுகிறார்கள். அவன் தன் கல்யாணத்துக்கு வாங்கின கடனைச் சீக்கிரம் தீர்த்துவிடவேண்டுமே யென்ற கவலையால் உடம்பு மெலிவதை இவர்கள் அறிவார்களா? [அந்தக் கடனை இவர்கள் தீர்த்துவிட்டால் மாப்பிள்ளை வெகு சீக்கிரம் புஷ்டியாகிவிடலாம். ப-ர்.]

7. இரவலும் திருட்டும்:— நம் வீட்டில் உள்ள ஒரு வஸ்து நமக்கறியாமல் திருட்டுப் போய்விட்டால் அவ்வளவாகக் கவலை ஏற்படுவதில்லை. ஆனால், அதே வஸ்துவை ஒருவர் இரவல் கொண்டுபோய்த் தராமலிருந்துவிட்டாலோ அப்பொழுதுதான் அதிக கவலை உண்டாகிறது.

8. இதை யார் கேட்டார்கள்?:—நாடகசாலையில் தன் நண்பனைக் கண்டதும் சோபா டிக்கட்டு கிடைக்கவில்லை; அதனால் நாற்காலியில் உட்கார நேர்ந்ததென்று கூறுகிறான். இவனுக்குசோபாடிக்கட்டு கிடைக்காததைப்பற்றி இவனிடம் யாராவது கேட்டார்களா?

9. அமைப்புக்கேற்ற நிகழ்வு:— அவர் தனக்கு 10-ரூபாய் பாக்கித் தரவேண்டியிருந்து ரொம்ப நாளாக அலையவைக்கிறாரென்று கவலையுற்றிருக்கும்போது அவரே 40-ரூபாய் பெறுமான நகையை விற்பனை செய்யும்படி கூற, அதன்மூலம் நமது கடன் வசூலாகிறது. இன்று காபி ஹோட்டலுக்குப் போய்ச் சாப்பிட நாலணா கையில் வைத்துக்கொண்டிருக்கும் சமயம், தாயார் பழய சோறு சாப்பிடும்படி கூற, அவ்விதமே சாப்பிட்டு அந்த நாலணாவை மிச்சப்படுத்தினால் கிருத்திகைத் தினமாகிய மறுநாள் வீட்டில் பலகாரம் செய்து குடும்பசகிதம் உண்பதற்கு அந்தப் பணம் உதவுகிறது. இவ்விதமே ஒவ்வொன்றும் அமைப்புக் கேற்றபடி நிகழ்வது இறைவனின் செயலே.

S. S. ராமாச்சாரி.




வேதம் ஒன்றே. அதற்கு வியாக்கியானங்கள் பல உள. அதை விளக்கிக் காட்டவே தீர்க்கதர்சிகளும் ரிஷிகளும் அடிக்கடி தோன்றுகின்றனர்.




# பந்நா தேவி



117-ம் பக்கத் தொடர்ச்சி.)



அங்கங்கே வழியான து மேடும் பள்ளமும், கோணலும், குருகலுமாயிருப்பினும், சில இடங்களில் மலைச்சந்திலும் மரங்களிடையிலும் செல்லும் விண்மீன்களின் வெளிச்சம் உதவியாயிற்று. இடையிடையே எதிரிகளுடைய தீவர்த்தியொளியையும், அவ்வொளியில் காவலாளர் காவல்புரியக் காண்பதையும் கண்டு அவன் பட்ட கஷ்டம் அதிகம். இன்னும் சிறிது நேரத்தில் நிலாத் தோன்றுமாதலால் அதற்கென் செய்வது ? ஓட்டமாயோடி அவர்களைக் கடக்கவும் வேண்டும். ஓடுவதை அவர்கள் அறியாதிருக்கவும் வேண்டும். அவன் சமயப்படி மெதுவாயும் விரைவாயும் நெடுந்தூரம் நடந்து எதிரிகளைத் தாண்டி, அப்பால் 'இனி அச்சமில்லை' என்று எண்ணுகையில், அடுத்திருந்த புதரிலிருந்து பெருத்த உருவமொன்று அவன்மேற் பாய்ந்தது. ஓர் நொடியில் இவ்விருவரும் ஒருவரையொருவர் கட்டிக்கொண்டு தரையிற் புரண்டார்கள்.

இராம்சிங்கோ சிறுவனாயினும் இரும்பினேர் நெஞ்சினன். சிலம்ப வித்தையிலும் குத்துச்சண்டையிலும் தேர்ந்தவன். இப்போது இருப்புப் பிடிபோலும் தன் கழுத்தை யிறுத்தியது மனிதனோ விலங்கோ மற்றியாதோ தெரியவில்லை. அவன் அப்பிடியை விலக்க இயலாமலும், மூச்சுவிட முடியாமலும் படுத்தவாறே கிடந்தான். "பமேலே! எழுந்து என் பின் பின்னே வா! நவாபண்டை போகலாம்" என்ற பேச்சு கேட்டது. அப்பால் அவ்வுருவத்தின் கைப்பிடி சற்றுத் தளரவும் இராம்சிங்கு உறிட்டுப் பார்க்க, அது ஓர் போர் வீரனின் உருவம் எனக் கண்டான். அவ்வீரன் சிறுவனோடு சண்டை செய்வது

---

முன்பு அவரை—அவனை—கொண்டாடியது சரி. இப்போதோ அதற்கு முழுதுமே எதிரிடை! அந்த மனுஷ்யனும் இப்பொழுது ஒரு மூலையிலே!

அடாதென் றெண்ணி அவனைத் தூக்கிக்கொண்டுபோய்க் கொஞ்சதூரத்திலிருந்த தன் கட்டடத்தை நணுகினான். அங்கு தீவர்த்தி எரிந்துகொண்டிருக்கக் கண்டு சிறுவன் மனமோ திடுக்கிட்டது. உடலம் நடுங்கிற்று. தான் பட்ட பாடனைத்தும் பாழாயிற்றென்பதைப் பார்க்க அவன் கதி மற்றென்னாகும்?

ஃ

இதயத்தில் அவன் இவ்வாறு வருந்துகையில், ஓர் எண்ணம் உதித்தது. உடனே தன் மடியில் மறைத்து வைத்திருந்த கட்டாரியை எடுத்துத் தன்னைத் தூக்கிச் செல்பவனின் கையில் குத்தினான். அக்குத்தின் நோயால் அப்போர்வீரன் கோவென்று கதறிக் கைப்பிடியை விட, இராம்சிங்கு அதுதான் சமயமென்று ஓட்டம் பிடித்தான். நோயின் கொடுமையைக் கருதாமல் போர் வீரன் அவனைப் பின்தொடரினும், கல்லும் முள்ளும் செறிந்த கடுவழியாதலால் மெதுவாய் நடக்கலானான். சிறுவனோ நெடுந்தூரம் போய் ஓர் மரத்தடியில் மறைந்து உட்கார்ந்து தன் மடியை யவிழ்த்துப் பார்க்கக் கைக்குட்டையைக் காணோம். கைக்குட்டையிலிருந்த கைவளையு மில்லை.

ஃ

அவன் "ஐயோ! என் உயிரினும் உயர்ந்த இவ்வைர வளையல் வழியில் விழுந்துவிட்டதே. போர் வீரனின் கண்ணில் பட்டால் மறுபடியும் அதைப்பெற இயலாதே. இதுகாறும் பட்டதெல்லாம் பாழாயிற்றே" என்று இவ்வாறு எண்ணி ஏங்கிக் கொண்டிருக்கையில் போர்வீரன் அவனைக் காணாமற்றானே அவ்வழியைத் தாண்டிச் சென்றான்.

ஃ

சிறிதுநேரம் கழிந்தது. போர் வீரன் மறைந்தான். சிறுவன் எழுந்து வந்தவழியே திரும்பிப் பார்க்க, சற்றுத்தூரத்தில் தன் குட்டையும் அதில் முடிச்சும் இருக்கக் கண்டு அதைச் சந்தோஷத்துடன் எடுத்து இடையில் இறுகக் கட்டிக்கொண்டு நடக்கலானான்.

ஃ

போர்வீரன் போட்ட கூச்சலால் மற்றப் போர்வீரர்களும் விழித்தெழுந்து ஒவ்வொருவரும் ஒரு தீவர்த்தியை ஏற்றிக்கொண்டு என்ன செய்தி யென்று காண, அவர்கள் தலைவனும் தன் குதிரை மீதேறித் தேடலானான். கொஞ்சதூரம் போனதும், குதிரை காட்டிற் செல்வது கஷ்டமாய்த் தோன்றியதால், அதனைத் தன் பின்வந்த ஓர் பையனிடம் கொடுத்துத் தலைவன் நடந்து போனான். அது முறட்டுக் குதிரையாதலால் அதனை நடத்திச் செல்லப் பையனாலாகவில்லை. குதிரை மேலெழுந்து குதித்தது. பல்லைக் காட்டிக் கனைத்தது. பலகால் கடிக்க வந்தது. அவனுக்கு உதவிசெய்வார் அங்கு யாரு மில்லை. சமீபத்தில் இராம்சிங்கு இருக்கக்கண்டு பையன், "தம்பி! நான் அவஸ்தைப்படவும் நீ ஆடிக்கொண்டிருப்பது அழகோ? என் அருகில் வந்து இதனைப் பிடி" என்று சொன்னான்.

(மற்றவை மற்றதில்.)

ப. சி. கோவிந்தசாமி ராஜா.

---

தாங்கள் கேவலப்படுத்துகிறவர்களின் நாலுதுசிக்குக்கூடத் தாங்கள் சமானமானவர்க ளல்லவென்பதை அந்தக் கேவலப்படுத்துகிறவர்களே உணர்ந்தாலும் வெளிக்குமட்டில் அதைக் காண்பித்துக்கொள்வதில்லை.




பதுமநாபன் :—இது என்ன ஆபீசுங்கோ? ஏதோ கெட்ட நாற்றம் வருகிறதே. மீன் கடையாயிருந்தால் ஏதாவது வாங்கிப் போகலாம்.

உத்தியோகஸ்தர் :—இது எரு ஆபீஸ். மீன், மீன் பிண்ணாக்கு, உப்பு, உரம் முதலியவை கிடைக்கும்.

பதுமநாபன் :—எங்க ஊரிலே எல்லாரும் பார்ப்பாருங்கோ. மீன் புண்ணாக்கு நெல்லுக்கு எருவாகப் போட்டால் பயிர் அறுத்த பின் நெல்லுக்கு மீன் நாத்தம் வராதுங்கோ?

உத்தியோகஸ்தர் :—நீங்க சாணி எரு போடுகிறீர்களே; நெல்லெல்லாம் சாணி நாத்தமா நாருகிறது?

ஃஃ

டிண்டில் :—(புதிதாய் இந்தியாவுக்கு வந்து ஆயிரக் கணக்கான சம்பளம் வாங்கும் விவசாய இலாகாவைச் சேர்ந்தவர்) :—இந்த ஊரில் என்ன பயிர் விசேஷமாகப் பயிரிடுகிறார்கள்?

குமாஸ்தா :—நெல், கொள்ளு, துவரை, கேழ்வரகு.

டிண்டில் :—கடைசியில் என்ன பயிர் சொன்னாய்?

குமாஸ்தா :—கேழ்வரகு சார்.

டிண்டில் :—இந்தக் கிராமத்தில் சுற்றுப் பக்கத்தில் காடுகள் கிடையாதா? அடுப்புக்காகக் கேழ்வரகா பயிரிடுகிறார்கள்?

குமாஸ்தா :—கேழ்வரகு அடுப்புக்கு எரிக்கிறதற்கு இல்லை சார்! அது தானியங்களில் ஒன்று.

டிண்டில் :—என்னுடைய தமிழ் முனுஷி இன்று விறகு என்னும் புதிய பதத்தைச் சொல்லிக் கொடுத்தார். ஆகையினால் தான் கேழ்வரகென்றால் அடுப்புக்கு எரிக்கும் ஒருவகை மரமென்று நான் யோசனை செய்தேன்.

ஃஃ

கணவன் :—உன் தம்பியையும் தாயையும் இங்கேயே வைத்துக் கொள்ள எண்ணமா?

மனைவி :—அவர்கள் இங்கு இருப்பது உங்கட்குக் கசப்பாயிருக்கிறதா?

ஃஃ

மாம்பழம் :—ஓ அம்மா! வெள்ளரிப்பழமே, க்ஷேமந்தானா? நீ பிஞ்சிலும், காயிலும், கனியிலும் எந்த வயதிலும் உதவுகிறாய். உன்னைப் பார்த்து ஒரு வருஷமாச்சு.

வெள்ளரிப்பழம் :—உன்னைப் போலத் தான் நானும். நீ வரும்போது நானும் வருகிறேன். நீ போவதற்கு முன் நானும் போய்விடுகிறேன்.

ஃஃ

நாயகி :—என்னங்காணும் என்னைத் தொடுகிறீர்?

நாயகன் :—ஏண்டி கண்ணே! தொட்டால் என்னடி?

ஃஃ

தனலக்ஷ்மி :—ஒரு ரூபாய் கடன் வேணும். இல்லையெனக் கூடாது.

சீதாலக்ஷ்மி :—ஐயோ, அம்மா! இங்கே யார் வைத்திருக்கிறார்கள்? எல்லாம் அப்படியப்படித்தான் இருக்கிறது.

ஃஃ

---

ஒருவனுக்கு உயர்வாகத் தோன்றுகிற விஷயம், மற்றவனுக்கு அற்பமாகப்படலாம். அப்படி அற்பமாக நினைத்தாலும் அதற்குள்ள மதிப்பைமட்டும் கெடுக்க முடிகிறதில்லை.

பர்த்தா :—இதென்ன கருமம் இப்படிப் படுத்துக் கிடக்கிருயே. இன்னும் அடுப்பு மூட்டவில்லையே?

பத்தினி :—கருமம் செய்பவர்களுக்குச் செய்யட்டும். எனக்கேன் கருமம்?

பர்த்தா :—ஜாஸ்தி பேசினுயோ உதைப்பேன்! எழுந்திருக்கிருயா இல்லையா? ஓகோ!

ஃ

தாய் :—சற்றுப் பொறுங்கள், அவள் விழித்துக்கொண்டிருக்கிருள்.

தந்தை :—இல்லை, அவள் அப்போதே தூங்கிவிட்டாள்.

பெண் :—என்ன அப்பா! நான் கட்டாயம் தூங்கத்தான் வேணுமா? நித்திரை வரவில்லையே.

தந்தை :—இன்னுமா விழித்திருக்கிருய்? ஒன்றுமில்லை யம்மா!

ஃ

வேலைக்காரி :—"என்ன காலணுவுக்கு நாலணு கொடுக்கிறீர்களே?"

எஜமானர் :—"நாலணுவல்ல; உனக்கு வேண்டியதெல்லாம் கேள் தருகிறேன். தீபாவளிக்கு சேலையும் வாங்கிக் கொடுக்கிறேன்."

வேலைக்காரி :—"நீங்கள் அதிகம் கொடுக்க வருவது என் கற்பைப் பாழ்படுத்தச் செய்கிறதற்கு என்று தோன்றுகிறது. உங்கள் மனைவிமூலமாய் அந்த அதிகத்தைக் கொடுத்தால் பெற்றுக் கொள்கிறேன். உங்களிடம் வாங்கமாட்டேன். ஆண்களின் சிரிப்புக்கு என்ன அர்த்தமென்று எனக்கு வெகு நன்ருய்த் தெரியும்."

ஃ

அவன் :—"கல்யாணம் இப்போது இல்லையென்ருல் நாளைக்கு ஒரு தாசியை ஏற்பாடு செய்துவிடுகிறேன்."

இவன் :—"அதற்கு முன்பே பணம் பிடுங்கியான் ஒரு வைத்தியரையும் கண்டிராக்டாக ஏற்பாடு செய்துவிடு."

ஃ

கோக்கு :—"அந்த அம்மாள் என்ன அப்படி உப்பிப்போகிருள்?"

குருவி :—"ஆம், ஒல்லியான குச்சி போலுள்ள புருஷனுக்குத் தகுந்த மனைவி தான்!"

ஃ

கணவன் :—"என் கோவணத்தைக் காணேமே?"

மனைவி :—"அப்போது நாற்காலியில் எறிந்தீர்களே!"

ஃ

நாணு :—"அந்தப் பணக்காரர் உன்னைப்பற்றி அதிகம் கோபித்துக் கொண்டாரப்பா!"

கோபு :—"ஏழை பணக்காரன் வீட்டுக்குச் சென்ருல் அப்போது ஆக்கின குழம்பும் சாதமுமே உபசாரம். பணக்காரர் ஏழையிடம் வந்தாலோ ஒரு தனியான பாயசவிருந்து. ஏழை தான் புசித்ததற்கு எவ்வளவோ விசுவாசங் கொள்ள, பணக்காரரோ எவ்வளவு உபசரிப்புக்கும் அலக்ஷியமே செய்து விட்டு ஏழையைக் கொண்டு எல்லா வேலையும் வாங்கிக்கொண்டு மேய்த்தானதும் வண்டி ஏறிவிடுகிருர்கள். இதைத் தெரிந்து நான் விழித்துக்கொண்டு ஒதுங்கினதற்கு அவர் அவ்வளவு கோபங்கொண்டு குதிக்கிருர் போலும்!"

---

"அமிர்த குணபோதினி"யைத் தழுவி 'அதன் மாதிரியில் மற்ருெரு பத்திரிகை யில்லை' என்பது அதை வாசித்தவர்களின் அபிப்பிராயம்.

---

விழித்துக்கொண்டவனை வீடும் பழிக்கிறது, நாடும் பழிக்கிறது, எல்லோருமே பழிக்கிறது; கடவுளும் அவனையே வெகுவாய்த் துன்புறுத்துகிருர்.






இன்று கூடிய நமது கடையில் பச்சடி பத்தடிநாத பிள்ளை "தனக்கு அது ஒரு குத்தலாகப் படுவது ஏன்?" என்பதைப் பற்றிப் பேசினார். "களவோ, விபசாரமோ, வஞ்சகமோ, மோசச் செயலோ—மற்றவர் பேசும் பேச்சில் கலந்திருந்தால், அந்தப் பேச்சைச் சாதாரணமாகப் பொதுவில் மற்றவர் பேசியிருந்தபோதிலும், அது தன்னைக் குறித்தே மறைவாகச் சொல்லப்படுகிறதோ வென்று குற்றமுள்ள நெஞ்சு சந்தேகிக்கின்றது. அந்தப் பேச்சு தனக்கு ஒரு குத்தலாகவும் படுகின்றது. இரகசியத்தில் கெட்டுப்போய் அதை மூடி வைத்துப் பத்தினிப் பாசாங்கு செய்பவர்களில்லையா வென்று ஒரு பெண் சாதாரணமாகச் சொல்லுகையில், அதைக் கேட்கும் கற்பழிந்த பெண் தன்னைப்பற்றித் தான் அவள் ஜாடையாகப் பேசுகிறாளோ வென்றும் எண்ணமிடுகிறாள். அந்தப் பேச்சு அவள் நெஞ்சைத் துளைக்கிறது. அன்பு காண்பித்துச் சந்தியில் விட்டவர்களில்லையா வென்னும்போது, அவ்விதம் அன்புணர்த்திப் பின் ஏமாற வைத்தவர்கள் அந்தச் சமயம் அருகிலிருப்பின் தம்மைப் பற்றியேதான் பேசப்படுகிறது என்றும் எண்ணிவிடுகிறார்கள். அவ்விதம் சொன்னதற்காக வெகு ஆத்திரமும் கொள்ளுகிறார்கள்." என்றார்.

ஃ

"தன்னை வேறு குலமென்று மற்றவர் நினைக்கும்படி செய்து வந்த ஒரு நாவிதரின் மனைவி தான் போயிருந்த ஒரு ஊரில் தன் கணவரின் நண்பரைப் பார்க்க ஒரு வீட்டிற்குச் சென்றாள். அந்த நண்பர் அந்த சமயம் வீட்டி லில்லை. காணச் சென்ற இந்த அம்மை அவ்வீட்டிலிருந்த பெண்ணிடம் தான் உள்ளே வரலாமா என்று கேட்டு விட, அவ்விதம் கேட்டதில் ஒரு ஸம்சயம் கொண்டு உள்ளே வரவொட்டாமல் "இங்கேயே உட்காருங்கள்; அவர் சீக்கிரம் வந்துவிடுவார்" என்றாள். இதை அந்த அம்மை கேட்டுத் தான் நாவிதரின் மனைவியென்று அந்தப் பெண் உண்மையைத் தெரிந்துகொண்டு விட்டாளென்று எண்ணிக்கொண்டாள். அந்தப் பெண் எதையும் நினையாதிருக்கையிலேயே இந்த அம்மை தன்னை அந்தப் பெண் தாழ்வாகக் கருதியதாக நினைத்தது தனது சந்தேக நெஞ்சினாலேயேதான். தன் எண்ணத்தின் தவறுதலே தன்னைத் தடுமாற வைக்கிறது; தப்பிதமாகவும் பலபல நினைக்கவும் செய்கிறது" என்றார் அழுக்கு வேஷ்டி வைதீக நாமம் அவலக்ஷணம் பிள்ளை.

ஃ

"ஒரு டாக்டரைப் பார்ப்பதற்கு வந்தவர் அந்தச் சமயம் வீட்டில் எவருமில்லாததையும், மேஜைமீது ஒரு அழகிய வெள்ளிக்கிண்ணி யிருப்பதையும் கண்டு அதன்மீது ஆவல் கொண்டு அதை மெதுவாக எடுத்துக் கக்கத்தில் வைத்து மறைத்தவாறு வெளியில் வர, அதே தருணத்தில்

---

வயிற்றுக்காக மனிதசுபாவத்தையும் இழந்துவிடுபவன் உலகில் மிருகமாவான்.

டாக்டரும் வண்டியைவிட் டிறங்கி வீட்டின் வாயிற்படியில் காலை வைத்தார். அவரைக் காண வந்தவர் அவரைக் கண்டதும் திடுக்கிட்டுத், தங்களைப் பார்ப்பதற்கு வந்து தாங்கள் இல்லாததால் வருத்தமாய் வெளியில் வந்தே னென்றார். அதற்கு டாக்டர் என்ன விசேஷம், உமது தோள் வீங்கியிருக்கிறதுபோ லிருக்கிறதே என்று சொல்லிக்கொண்டே தோளின்மீது கையை வைத்தார். கிண்ணித் திருடருக்கோ தன் களவு வெளியாய்விடுமென்று நடுங்கி, "ஆம் தோளில் வலிதான்; இந்தச் சமயம் அல்ப சங்கைக்குச் செல்ல உதவி செய்ய வேண்டும்" என்றார். டாக்டரும் "அதற்கென்ன அதோ அந்தக் கதவைத் திறந்துகொண்டு செல்லுங்கள்" என்று காட்ட, இவரும் அதனுட் புகுந்து, அப்படா தப்பினோம்; இந்தக் கிண்ணியை அந்த மேல் கூண்டில் வைத்துவிடுவோ மென்று வைக்கப் போனார். அவ்வேளையில் கக்கூஸ் சுத்தி செய்ய வந்த தோட்டி அதன் சிறு கதவைத் திறந்துகொண்டு தன் தலையை நீட்டி ஒரு வெள்ளிக் கிண்ணியை ஒருவர் மேலே வைப்பதைப் பார்த்தான். திருடரோ கிண்ணியை வைத்துவிட்டுப் பெரு மூச்சுடன் கீழ் நோக்கவும், தோட்டி தன்னைப் பார்த்துக்கொண்டு நிற்பதைக் கண்டு நடுங்கினார். ஆயினும் சமாளித்துக்கொண்டு, தோட்டியை நோக்கி, "நான் மலவாதைக்கு இருந்துகொண்டிருக்கையில் சிறிது மேல் நோக்கவே இந்த அழகிய கிண்ணியைக் கண்டு எடுத்துப் பார்த்தேன். எவரோ இங்கு ஒளிய வைத்திருப்பதாக எண்ணினேன். பின் இது பெரிய வீட்டு விஷயம் என்று மௌனமாய் அது இருந்த இடத்திலேயே வைத்துவிட்டேன் என்றார். அதற்குத் தோட்டி— எல்லாம் வேண்டியவர்கள்தான் செய்திருப்பார்கள்; நான் அதை எடுத்து டாக்டர் அய்யாவிடம் கொடுத்துவிடுகிறேன்" என்று கூறினான். அவன் அதைக் கபடமற்றுச் சாதாரணமாகச் சொல்லியிருந்தும், திருடருக்குத் தான் கக்கத்திலிருந்து கிண்ணியை எடுத்தபோது தோட்டி பார்த்துவிட்டானோ வென்றும், எவ்வளவு நேரமாக இங்கு நின்று தன்னைக் கவனித்தபடியிருக்கிறானோ வென்றும் எண்ணிக் கலங்கவே, தோட்டியின் சாதாரணச் சொல் அவருக்கு ஒரு குத்தலான சொல்லாகவும், தன்னைப் பற்றியே மறை பொருளாக—"எல்லாம் வேண்டியவர்கள்தான் செய்திருப்பார்கள்"—என்று பேசுகிறானோ வென்றும் திகில்பட்டார். இச்சமயத்தில் தோட்டி தானே அந்தக் கிண்ணியை எடுத்துக்கொண்டு டாக்டரிடம் சென்றான்.

திருடர் பெருமான் மிக்க நடுக்கத்துடன் கக்கூசுக்குள் இருந்த குழாயைத் திறந்து கால் கை சுத்தி செய்வது போல் நடித்துச் சுத்தி செய்துகொண்டு வெளியில் வரவும் டாக்டர் கிண்ணியுடன் நிற்பதைக் கண்டார். திருடரைப் பார்த்ததும் டாக்டர் "இப்பொழுது உமது தோள் வீக்கம் எப்படியிருக்கிறது?" என்று சாதாரணமாகக் கேட்டார். திருடருக்கு தான் கக்கத்திலிருந்து கிண்ணியை எடுத்து மேலே வைத்ததைத் தோட்டி அப்படியே சொல்லிவிட்டானென்று எண்ணியவராய் டாக்டர் குத்தலான

---

புதிதான ஒன்றை நம்பி, நெடுநாள் உள்ள பழையதை உதறிவிடவொண்ணாது. புதியது பழயதைப்போல் அவ்வளவு சுமை தாங்காது. புதியது ஒதுங்கிவிட, பிறகு பழயதையே தேடிப்போகவும் ஒரு காலம் வந்துவிடுகிறது.

சொல்லாகத்தான் "தோள் வீக்கம் எப்படியிருக்கிறது"? என்று கேட்கிறார் போலும் என்று எண்ணியபடி டாக்டரை நோக்கி "என்னை மன்னிக்கவேண்டும்" என்றார். "என்ன மன்னிப்பதா?" என்று டாக்டர் சற்று உரத்துச் சொன்னார். இந்தச் சொல் திருடர் பெருமானுக்கு இன்னும் அதிக நடுக்கமாகித் தன்னைப் போலீஸில் ஒப்புவித்து விடுவாரோ என்றும் திகைத்தார். அத்தருணம் டாக்டரின் முகத்தில் கோபக்குறி ஏதும் காணாததைக் கவனித்து ஒரு சமயம் அவருக்கு எந்த விஷயமும் தெரியாதிருந்தாலும் இருக்கலாம்; இன்னும் சமாளித்துப் பார்ப்போமென்று எண்ணி, "ஆம்! என்னை மன்னிக்கவேண்டும், நேற்று குடி மயக்கத்தால் என் மனைவியைக்கண்டபடி அடித்துவிட்டதில் என் தோள் நரம்பு சுளுக்கிக்கொண்டு மிக்க வேதனை செய்கிறது; இனி இம்மாதிரி செய்வதில்லை; மன்னிக்க வேண்டும்" என்றார். அதற்கு டாக்டர் "உமது தவறான செய்கைக்கு என்ன சொன்னபோதிலும் நீர்பட்ட மனோவாதனையே போதும்; வேறு சிக்ஷை வேண்டாம்; நானும் மன்னிக்கிறேன்" என்றார். இந்தச் சாதாரணச் சொல்லும் திருடர் பெருமானுக்குக் குத்துச் சொல்லாகவே பட்டு, தான் மனைவியை யடித்ததாகச் சொல்லிய பொய்யை அவர் நம்பாமல், கிண்ணியை எடுத்த தவறான செய்கையையே அவர் குறிப்பிடுகிறார் என்றும் என்று எண்ணிக் கலங்கினார். அதன் பின் டாக்டர் அவர் தோளின் மேல் மருந்தைத் தடவி போய் வரும்படி யனுப்பினார். அப்பொழுது தான் டாக்டர் ஆதிமுதற்கொண்டு தன்னைச் சந்தேகிக்கவில்லை யென்றும், தன் குற்றமுள்ள நெஞ்சே அவரது சாதாரண சொற்களைக் குத்தலான வார்த்தைகளாக எண்ணிக் கொண்டதென்றும் உணர்ந்து டாக்டரின் வீட்டை விட்டு வெளியில் வந்தார்.

அச்சமயம் திருடரின் மனைவி சுரமாயிருக்கும் தன் கைக்குழந்தையுடன் எதிரில் சந்தித்தாள்.

"நீங்கள் டாக்டர் வீட்டிற்குப் போன அப்பொழுதே புறப்பட்டேன். குழந்தை வாந்தி எடுத்ததால் வர நேரமாயிற்று. டாக்டர் இருக்கிறாரா? சுரத்துடன் வாந்தியும் எடுப்பதாகச் சொல்லுங்கள். என்னை இன்னும் காணோமே என்று வீட்டிற்குப் புறப்பட்டீர்களாக்கும்" என்றாள்.

திருடர் பெருமான் பெருமூச்சு விட்டார். "குழந்தை வாந்தி செய்தது நல்ல காலமாயிற்று; இல்லாவிடில் தான் மனைவியை அடித்ததாகச் சொன்ன சமயம் மனைவியும் அங்கு வந்திருந்து, டாக்டரும் அவள் அடிபட்டதைக் கேட்டு, அவள் தான் அடிபடவில்லை யென்று சொல்லிவிட்டிருந்தால் இன்னும் பெரிய திகைப்பாகி விடும்; நல்ல காலத்தால்தான் வாந்தியும் வந்து நன்மை செய்தது" என்று தனக்குள் நினைத்துக்கொண்டு, "டாக்டர் இன்னும் வரவில்லை; நமது தெருவில் இருக்கிற நாட்டு வைத்தியரிடம் போய்ப் பார்ப்போம்" என்று மனைவிக்குச் சொல்லி அவளைத் தம்முடன்

---

"தேய்ந்துவிட்ட எனது கௌரவத்தைப் பெருக்கி அதன் பலனாக எனது பழய மதிப்பை முன்போல் பெற்றுக்கொள்ள எது சரியானவழி யென்று சிந்தித்தபடி தவிக்கிறேன். ஒரு வழியும் தெரியவில்லையே தெய்வமே!"

அழைத்துக்கொண்டு செல்வதானுர். மனதிற்குப் பிறாது சொல் ஒரு குத்தலாகப் படும் விதம் எவ்வாறென்று திருடர் பெருமானின் திவ்ய சரிதையிலிருந்தும் திவ்யமாய் அறியலாம்!" என்ருர் தாண்டவக்கோன்.

ஃ

"அவ்வளவு அதிக வியாதியாயிருந்தும், பிழைக்கமாட்டானென்று கடிதம் எழுதியும் கூட வரவேயில்லை" என்று ஒருவரைப்பற்றிக் கூறும்பொழுது, அதை அருகிலிருந்து கேட்பவர், தானும் அவ்விதம் ஓர் சமயம் அந்த வீட்டுக்காரனைப் பார்க்க வாதிருந்திருப்பதால், இந்த வார்த்தைக்குப் பிறகு தன்னைப்பற்றிய சங்கதி எங்கு தொடர்ந்து வந்துவிடுகிறதோ வென்று அஞ்சுகிருர். உடனே வேறு பேச்சு எடுத்து அந்த வார்த்தையை மாற்றப் பார்க்கிருர். இது குற்றமுள்ள நெஞ்சு செய்யும் வேலைதானே?" என்ருர் ஐஸ் கிரீம் விசிரிமடிப்பு ஜரிகை வேஷ்டி ஸ்ரீநிவாஸ வரத ஐயர். ஃ

"நண்பர்கள் நல்லவர்கள்தான்; ஆனல், கடன்பெற்ருல் அதை மட்டும் திருப்பித் தருவதில்லை; நானும் அதைக் கேட்காமலே விட்டுவிட்டுப் பிறகு எதுவும் தருவதில்லை" என்று ஒருவர் சொல்லுகையில், அவரிடம் அவசரமாகப் பத்து ரூபாய் கடன் பெற்றுப் பிறகு பல பாடுகளில் தரமுடியாமலே போகும்படியானவர் அதைக் கேட்கும்போது இது தன்னைப்பற்றித்தான் குத்தலாகப் பேசும் சங்கதியென்று நினைத்துவிடுகிருர். அதைச் சொல்லியவரோ இவாது விஷயத்தையே மறந்துவிட்டு மற்றவர்களைப்பற்றிப் பேசியிருந்தும், தமது குற்றமுள்ள நெஞ்சு தம்மையே சொல்லியதென்று எண்ணிக்கொள்ள அதனுல் வேகும்படி நேர்கிறது. இதற்கு யார் தான் என்ன செய்யலாம்? குத்துச் சொல்லாகப் படுவது அவரவர்களின் குற்றத்தாலேயேதான்" என்ருர் கொக்கரக்கோ கோனுர். இத்துடன் நமது கடையும் முடிவானது.

'பஹதூர்' பொன்வண்டு செட்டியார்.

## பற்றிக்கொள்ளாத கொள்ளி!

"வைத்தாலும் வைத்தாய்! நல்ல இடம் பார்த்துக் கொள்ளி வைத்தாய்! ஆனுல், புகை வந்ததே தவிர, பற்றிக்கொள்ளவில்லை. அது ஒன்றுதான் பாக்கி! இதை மறந்துவிட அடுத்த ஜென்மத்தில் கூட எனக்குச் சக்தியில்லை. 'சக்தியில்லாததை மறந்துவிடு' என்ருல் எப்படி? அது ஒரு பக்கம் இருக்கட்டும்; மற்ருெரு புறத்தே நாம் மனப் பகையின்றி வாழக்கடவோம். அதுவே ஒருவரையொருவர் இனியேனும் தூஷித்துக்கொள்ளாமல் நாட்களைக் கடத்துதற்கு நல்லதோர் வழி. இந்த வழியேனும் நிறைவேறுமா? அதுதான் பெரிய கேள்வி."



# பிளாஸிடஸ்

## (ஞான ஜோதி கண்ட பெரியார்.)

## II



மறுநாள் யூஸ்டேவியஸ் வேட்டையாட வனத்திற்குச் சென்று, தன்னுடன் இருந்த வேடுவர்களை ஒருபுறத்தே போகும்படி ஏவிவிட்டு இவன் தனியே நின்றிருக்கும் பொழுது, சிலுவையைத் தாங்கிய அந்த மான் இவன்முன் தோன்ற, அவ்வுருவம் பின்வருமாறு சொல்லிற்று :—

“யூஸ்டேவியஸ், நீ இப்பொழுது என் அடியார்களில் ஒருவனாக ஆய்விட்டாய். ஆனால் நீ முன்பு அனுசரித்ததும், இப்பொழுது நீங்கிவிட்டதுமான பேயாகிய சாத்தான் (Satan) உனக்குப் பலவிதமான கெடுதல்களைச் செய்வான். இக்கஷ்டங்களினின்றும் மீண்டும் நீ அவன்பால் வெற்றிகொள்ளப் பலநாட்கள் செல்லும். ஆகலின், இத்துன்பங்களை இப்பொழுதே அனுபவிக்கிறாயா?— அல்லது, உன் அந்திய காலத்தில் அனுபவிக்கிறாயா? உன் விருப்பமெதுவோ அதைச் சொல்.” என்பதுவே.

யூஸ்டேவியஸ், கிறிஸ்துவின்பால், மிக்க நம்பிக்கை கொண்டவனாயும் அவருடைய உண்மைப் பக்தன் என்பதைக் காட்டிக்கொள்ள மிகுதியும் விருப்பமுடையவனாயும்—தனக்கு நேரிடுதற்குரிய கஷ்டங்களெல்லாம் உடனே உண்டாவதே தன் பிரியமென்று சொல்ல; உருவமும் அவனுக்கு ஆபத்துகளில் உதவி, ஊக்கம், தைரியம் ஆகியவற்றைக் கொடுப்பதாக வாக்களிக்கவே அதன்பின் மான் மறைந்தது.

யூஸ்டேவியஸ் தன் நகரம் திரும்பிவந்தான். அதுமுதல் கஷ்டங்கள் ஒன்றன்மீதொன்றாய்ப் பலவிதத்திலும்வருத்தின. உறவினர்கள்வியாதியால் இறந்தார்கள். கால்நடைகளான ஆடு, மாடு, குதிரை முதலியன மாண்டன. திருடர்கள் வீட்டுக்குள் புகுந்து தட்டுமுட்டுச் சாமான்களுட்பட எல்லாவற்றையும் கொள்ளையடித்துச் சென்றனர். கடைசியாக, இவனுடைய உயிருக்கும் சிலர்கூடி உலைவைக்க ஆரம்பித்தனர். இதற்குப் பயந்து தன் மனைவி மக்களுடன் வேறெவரும் அறியாதபடி வெளியூர் சென்றான். வாழ்வு ஒரு நிலையா?

வறுமைப் பிணியால் வருந்தி, அநேக ஊர்கள்தோறும் அலைந்து திரிந்து முடிவில் கடற்கரையை அடைந்தார்கள். அச்சமயம் வெளிநாட்டிற்குச் செல்ல ஒரு கப்பல் தயாராயிருந்தது. அதில் அவர்கள் உடனே ஏறிக்கொண்டார்கள்.

நிற்க, யூஸ்டேவியஸின் மனைவி நல்ல அழகு வாய்ந்தவள். கப்பல் தலை

வன். இவ்வாது வனப்பைக் கண்டு இச்சைகொண்டு இவளைத் தன் அடிமையாக்க எண்ணினன். இவ் வெண்ணத்தைப் பூர்த்திசெய்ய ஒரு சூழ்ச்சியையும் தேடினன். கடலைக் கடந்து எதிரிலிருக்கும் கரையை அடைவதன்முன்பே பிரயாணிகளிட மிருந்து கப்பற் சத்தம் (fare) அதிக மாகக் கேட்கத் தலைப்பட்டான். ஏழை யூஸ்டேஷியஸிடம் கொடுப்ப தற்கு ஒன்றும் கிடையாது. இதை அவ்வக்கிரமக் கப்பற்றலைவன் நன் ருய் அறிந்திருந்தான்.

ஃ

"இம்மனிதனைக் கடலில் தள் ளுங்கள்" என்று தலைவன் கப்ப லோட்டிகளுக்குக் கட்டளையிடவே, அவர்கள் இரக்கமென்பது ஒரு சிறிது மின்றி, யூஸ்டேஷியஸை அவன் தாவிப்பிடித்திருந்த குழந்தைகளுடன் கடலில் தூக்கி எறிந்தார்கள். அவன் அருமை மனைவி இன்னது செய்வ தென்று தோன்றாதவளாய் அழுத கண்ணும் சிந்திய மூக்குமாய்க் கப்ப லில் சென்றனள். இவனும் தன் குழந்தைகளை முதுகின்மேல் போட் டுக்கொண்டு கடலில் நீந்திக் கரையை அடைந்தனன். சற்று இளைப்பாறிய பின் 'குழந்தைகளுக்கு உணவு தேட வேண்டுமே' என்ற ஆவலுடன் அவர் களை அழைத்துக்கொண்டு நடக்க லுற்றான். வனங்களும் சோலைகளும் நிறைந்துள்ள ஒரு தேசத்தை யடைந் தான். பல ஆறுகள் குறுக்கிட்டன. அவைகளில் ஒன்று, இரு குழந்தை களையும் தூக்கிக்கொண்டு நீந்திச் செல்வதற்கு இயலாதபடி அவ்வளவு ஆழமும் விரைவுமுடையதா யிருந் தது. ஆதலின் ஒவ்வொருவராக இரு குழந்தைகளையும் அக்கரை சேர்க்கும் படி நேரிட்டது.

ஃ

தியாஸ்பீடஸ் என்ற சிறுவனைத் தன் கரங்களில் எடுத்துக்கொண்டு ஆற்றை அதி விரைவுடன் கடந்து அக்கரை யடைந்ததும் பின்னால் ஒரு கூக்குரல் கேட்டது. திரும்பிப் பார்த்தான். அகபீடஸை ஒரு கோனாய் கடிக்க வருவதைப் பார்த்தான். ஒரு விநாடியில் அது குழந்தையைத் தூக்கிக்கொண்டு வனத்தில் ஓடுவதை அடுத்த நிமிஷம் கண்டான். அக் கரைக்குக் கொண்டு சென்ற தியாஸ் பீடஸ் என்ற சிறுவனை அங்கேயே விட்டு, இக்கரை சேர்வதற்குமுன் அந்தக் கரையிலேயே ஒரு கூச்சல் கேட்டது. தியாஸ்பீடஸை ஒரு சிங்கம் தூக்கிச் செல்வதைப் பார்த் தான். இவ்விதம் அல்லலுறும் தந்தை தன் அருமைக் குழந்தைகள் அவ் விதம் அழிந்துவிடவே, உன்மத்தம் பிடித்தவன் போலக் கத்த ஆரம்பித் தான். தனலக்ஷ்மியையும், வீரலக்ஷ்மி யையும் ஒருகால் ஒருங்கே பெற் றிருந்த யூஸ்டேஷியஸ் இப்பொழுது திக்கற்றவனாகப் பிச்சை எடுப்பதற்குக் கூட முடியாதவனாய் மனைவி, மக்கள், மாடுகள், பந்து மித்திரர்கள் ஆகிய இவர்களை யெல்லாம் இழந்து தன்னந்தனியே தளர்ந்த நடையுடன் வனத்தினூடே சென்று, கடைசியில் ஒரு கிராமத்தை யடைந்தனன். அங் குக் குடிக்கக் கூழும், உடுக்க உடை யும், படுக்க இடமும் கொடுத்து உதவு வதாகச் சொன்ன ஒரு குடியானவ னிடம் வேலையாளாக அமர்ந்தனன். இவனைத் தெரிந்தவர்கள் யாவ ரேனும் ஒரு சமயம் பார்த்தாலும் அறிய முடியாதவண்ணம் இவன் உருமாறிப்போய் அக்கிராமத்தில் பதி னைந்து வருட காலம் ஊழியம் செய்து பிழைத்துவந்தான்.

(மற்றவை மற்றதில்.)



## 2—அற்ப குணம்.

(முன்பக்கம் 20-லிருந்து)

182. "ஒண்ட வந்த பிடாரி ஊர்ப்பிடாரி ஆனது போல"
183. "ஒண்ட வந்த பேய் ஊர்ப்பேயைத் துரத்தினது போல"

இவ்விரண்டு பழமொழிகளும் "விரல் நுழைக்க இடம் கொடுத்தால் தலையை நுழைப்பான்" என்ற பழமொழியின் தாத்பரியத்தையே கொண்டவைகள். ஸகோதரனின் மனைவியைச் சேர்ந்தவர்களென்று அவனது தாய் வீட்டார் நம் வீட்டில் ஒண்டியிருக்க வந்து, பிறகு அவர்களே வீடு முழுதுக்கும் அதிகாரம் செலுத்துகிறவர்களாய்விடுவதும் சாதாரணமாய்க் காணும் சங்கதியே. நம்மிடம் வேலைசெய்து பிழைப்பதற்கென்று ஒண்டவந்த ஒருவன் பின் நம்மைப்போல் வேறு கடை வைத்து, நமது கடை நஷ்டப்பட்டு நாம் ஓடிவிடும்படி செய்கிறதும் உண்டல்லவா? எவரும் முதலில் ஒண்டியிருப்பதற்கே வருவது; பிறகுதான் அவர்கள் தங்கள் தலையை நுழைத்துக் காலை நீட்டி நம்மையும் எதிர்க்கின்றனர். இதற்கு ஆரம்பத்திலேயே இந்த அற்பர்களை நமது வாயிற்படி ஏறவொட்டாமல் தடுக்கப் பார்ப்பதே சரி.

184. "கழுதை கெட்டால் குட்டிச்சுவர்"

குட்டிச்சுவர்தான் கழுதைக்கு வெகு பிரியமான இடமாம். அது காணமற் போய்விட்டால் குட்டிச்சுவர்களிலும் பாழும் இடங்களிலுமே அதைத் தேடிக்கொண்டு வரவேண்டும். அற்பர்களுக்கு அற்ப இடத்திலேயே புத்தி போவது இயற்கை. சில பெரிய குடும்பங்களில் உள்ளவர்கள் தங்களுக்கு யோசனைகளைச் சொல்ல அற்பர்களின் நட்பையே நாடி அவர்கள் சொற்படி நடந்து அற்ப கிருத்தியங்களைப் புரிந்து அற்பராய்க் கிடப்பர்.

185. "ஓதி பருத்தால் உத்தரமாகுமா?"

அற்பர்கள் பார்வைக்கு உயர்ந்த மலை உச்சியில் வாழ்ந்தாலும் மற்றவர்களுக்கு ஒரு எள்ளத்தனையும் பயன்படார். ஒரு சொற்ப பணம் ஒருவனுக்கு ஒருசமயம் கொடுத்திருந்தாலுங்கூட, அதை வெகு கணக்கு வைத்துப் பத்து வருஷங்களானாலும் மறவாதபடி இருந்து, ஒரு அவசரத்திற்குக் கடனாகப் பெற்றுப்போவதுபோல் பெற்றுப்போய், முன் தான் கொடுத்ததற்கும் இப்போது பெற்றுவந்ததற்கும் சரியாய்விட்டது என்பார்கள். இவ்வளவு அற்பத்தன்மையுள்ளவர்கள் யாருக்கு என்ன உதவி செய்யப்போகிறார்கள்?

---

சிலேட்டில் எத்தனை எழுத்துகள் தோன்றி எவ்வளவு துரிதத்தில் அழிக்கப்படுகின்றனவோ, அந்நிலையிலேயே இவ்வுலகச் செல்வமும் வாழ்வும் உள்ளன.

அவர்கள் எவ்வளவு உயர்ந்து நின்றாலும் அதனால் யாருக்கும் ஒரு பயனு மில்லை. தாங்கள் காட்டுகிற டாம்பீகத்திற்குத் தகுந்தபடி பெரிய புத்தி காணோமே!

186. "என்னமாய்ச் சொல்லி இதமாய் வளர்ந்தாலும் கழுதைக்கு உபதேசம் காதில் ஏறாது."

நாம் என்னதான் முயன்றாலும் அற்பனையுள்ள ஒருவனைச் சீர்திருத்த முடியாதென்பது இதன் தாற்பரியம். தன் குணம் அற்பகுணமென்பதை அற்பன் ஒருபோதும் அறிகிறதேயில்லை. தானே மற்றவர்களுக்கும் புத்தி சொல்லக்கூடிய பெரிய மனிதன் என்று தன்னையே கர்வித்துக்கொள்ளும் போது, அவன் எங்கே பிறரது நற்புத்தியைக் கேட்கப்போகிறான்? தன்னையே உயர்வாக நினைத்துள்ள அற்பனுக்கு அவனது அற்பத்தன்மையே பிரியமா யிருக்கும்.

187. "என்னைப்போல் குரலும், என் அக்காளைப்போல் ஒயிலும் இல்லை என்கிறதாம் கழுதை."

அற்பர்களின் சங்கதியும் இப்படியே. தான் மட்டுமல்ல, தன்னைச் சேர்ந்தவர்களும் மிக்க பெருமையில் உள்ளவர்களென்று அற்பன் ஸதா கர்வம் படைத்து நிற்பான். இந்த ஜன்மத்தில் அவனைத் திருத்த முடியாது. தன் குரலின் அவலக்ஷணத்தைக் கழுதை யறியாததுபோல், இந்த அற்பனும் தனது இழிய குணத்தை யுணர்வதில்லை.

188. "கண்ணாலே ஜீவன் கடகடவென்று போனாலும், வண்ணான் கழுதை சுமந்தே தீரவேண்டும்."

அற்பர்களுடைய புத்தி யோசனைகளுக்குத் தகுந்தபடி காலமுழுதும் அற்பப் பிழைப்பே அவர்களுக்குக் கிடைக்கின்றது. அந்தப் பிழைப்போ தேகத்தை யுழைத்துச் சீவிக்கவேண்டி வருகிறது. அவர்கள் தங்கள் பிராணன் போவதாயிருந்தாலுங்கூடத் தங்கள் வேலையைச் செய்யத்தான்வேண்டி யிருக் கிறது. ஏனெனில், அந்த வேலையை விட்டு, வேறொன்றைத் தேடிப் பிடித் துக்கொள்ள அவர்களது அற்ப புத்தியில் பெரிய யோசனைகள் உண்டாவ தில்லை. கக்கூஸ் சுத்தி செய்பவர்கள் அதே வேலையில் தம் மக்களையும் பழக்கு விக்கவேண்டுமோ? நல்ல கைத்தொழில்கள் போட்டு வேறு ஜீவனத்தைக் கற்றுக்கொள்ளும்படி ஏன் செய்யக்கூடாது? அதற்குப் பெரிய புத்தி யில்லை.

189. "கரும்பைக் கழுதைக்குமுன் போட்டால், கழுதைக்குத் தெரி யுமா கரும்பின் ருசி?"

190. "கழுதைக்குத் தெரியுமா கஸ்தூரி வாசனை?"

அற்பர்களுக்கு உயர்ந்த தன்மையுள்ளவர்களிடம் பழகவேண்டிய வித மும் தெரியாது; பழகவும் மனம் செல்லாது; பழகவேண்டுமென்ற அறிவு மில்லை. உயர்ந்த ஒன்றை மேன்மையாகக் கருதவும் அறியார். எதையும் அலக்ஷியம் செய்யவும், எதனிடத்தும் தங்களின் அற்ப குணத்தைக் காட்டவும் முற்படுவர்.

(தொடரும்.)

# நிலம் வாங்குவதின் அநுபவம்.

(86-ம் பக்கத் தொடர்ச்சி)

ஒருவர் :—"நல்ல விளைச்சல் இல்லை. இதுமட்டும் $2\frac{1}{2}$ ஏகர் நிலம்; இந்த $2\frac{1}{2}$ ஏகரும் எனது பாட்டனார் காலத்தில் 40 கலம் கேழ்வரகும், கம்பு 10 கலமும், நெல் 150 கலமும் ஆயிற்று. இப்பொழுது அவற்றில் மூன்றில் ஒருபங்கு கூட விளைவு இல்லை."

இன்னொருவர் :—"இந்த ஒரு காணி நிலமும் எங்கள் பெரியவர்கள் காலத்தில் 110 கலம் மிளகாய் காய்த்ததாம்; இப்பொழுது 50 கலம் ஆவது அருமையாக இருக்கிறது."

மற்றொருவர் :—"அடடா! முன்பு காடுகளிலெல்லாம் எவ்வளவு வெள்ளாமை விளைந்தது! எனக்கிருப்பதெல்லாம் 4 காணிதான், அந்த 4 காணியிலும் சோளம் 60 கலம், வரகு 20 கலம், அவரை துவரை கொட்டைமுத்து கம்பு முதலிய 30 கலம், ஆக 110 கலம் கண்டு வந்தது! இப்பொழுது நூறு கலமும் நீக்கிப் பத்து கலந்தான் காண முடிகிறது."

[ஏகர் 100 செண்ட் நிலம்; காணி $1\frac{1}{2}$ ஏகர் கொண்டது. காணியென்பது பலவிடங்களில் இவ் அளவை யிற் குறைந்தும் வழங்கப்படுகிறது. கலம் என்பது பட்டினம் படி 48 கொண்டது.]

ஃ

இதுபொழுது இவ்விதச் சொற்களே கிராமங்களில் ஒவ்வொருவருடைய வாயினின்றும் வெளிவருவதைக் கேட்கலாம். இதற்குக் காரணம் பருவமழை தவறியது ஒருபுறமிருக்கட்டும். பின் வருவது ஒரு முக்கிய காரணம்.—தாங்கள் சொந்த நிலங்களில் தங்கள் கைப்பட வேலை செய்வதை "அவமானம்" "கௌரவக் குறைவு" என்று கருதுவது. எல்லாவற்றிற்கும் கூலியாளிடத்தில் கையைக் காட்டிவிடுவது, கூலியாட்களோ "ஆனை வாழ்ந்தாலென்ன, பூனை தாலியறுத்தாலென்ன" என்றபடி, இலாபமோ நஷ்டமோ பண்ணைக்காரனைச் சேர்ந்தது; தமக்கு வேண்டியதெல்லாம் கூலியே யென்று நாட்களை ஓட்டி, "கூத்தாடி பார்ப்பது கிழக்கே, கூலிக்காரன் பார்ப்பது மேற்கே" என்ற முதுமொழியை உண்மை யாக்கிவிடுகின்றனர். நாளடைவில் அந்த மிராசுதாரன் கடன் என்னும் கடலிற் சிக்கிக் கரையேற வலியின்றி அழுந்திவிடுகிறான். அந்தோ! இத்தகைய காட்சி கிராமங்களில் இதுபொழுது மிக அதிகம். இக்காட்சி கொஞ்சம் "மிதப்பா"யிருந்த மிராசுதாரர்களின் குடும்பங்களில்தான் மிக அதிகம். உழைப்பது அவமானமென்று கருதுபவர்களும் அவர்களே. இதையொட்டி ஒரு சிறு கதையும் (கதையல்ல; நிகழக்கூடியதே) நாட்டுப்புரங்களில் வழங்கி வருகிறது. ஒரு பெரிய மிராசுதாரர் தமக்குள்ள நிலத்தில் ஒரு பகுதியைத் தாமே சொந்தத்தில் கூலியாட்களை வைத்துப் பயிர் செய்தும், மீதியை வாரத்திற்கும் குத்தகைக்குமாக விட்டும் வந்தார். வாரமென்றால் எருவும் தழையுங் கொடுத்துப் பயிர் செய்வித்து, விளைந்ததில்

---

எண்ணாமல் வந்த துணையே உண்மையான துணை. நினையாது தோன்றிய நினைவின் குறிப்பிலேயே பொருள் அதிகம் இருக்கும்.

பாதியைத் தானும் மறுபாதியைப் பயிர் செய்தவனுமாகப் பகிர்ந்து கொள்வது. அந்த மிராசுதாரர் நாள் தோறும் வயலிற்குப் போவதென்பது கிடையாது. சில நாளைக்குப் போவார், சில நாட்கள் போகமாட்டார். அங்ஙனம் என்றோ ஒரு நாள் வயலிற்குச் செல்பவர், அன்றாவது நேரே ஆட்களிடத்தில் நின்று வேலை வாங்குவதென்பது கிடையாது. அதுவும் "கௌரவக் குறைவு" என்பது அவர் எண்ணம். வயலில் எங்கோ ஓரிடத்தில் உட்கார்ந்துகொண்டு, அக்கம் பக்கத்துக் குடியானவர்களோடு சிறிது நேரம் பேசிவிட்டு, பின்பு ஆட்களிடத்தில் சென்று, "இவ்வளவு தானா வேலையாயிற்று? முட்டாள்கள், கழுதைகள்" என்று இழி சொற்கள் பல பேசி, "மத்தியானத்திற்குள் இந்த வேலை முடிந்துவிடவேண்டும்; மத்தியானத்திற்கு மேல் அந்த வேலை ஆகவேண்டும்" என்று கட்டளையிட்டு, வீட்டிற்குத் திரும்பிவிடுவார். மிராசுதாரர் கண்ணிற்கு மறைந்ததும் "போய்யா! உன்னைப்போல எத்தனையோ பேரைக் கண்டிருக்கிறேன். இந்த மிரட்டெல்லாம் யாரு கிட்டே" என்று பரிகசித்துச் சிரிப்பார்கள் கூலியாட்கள். தோட்டத்திற்கு வந்த பொழுது நிகழ்வது இதுவானால், வராதபொழுது நிகழ்வது எதுவென்று கூற வேண்டுவதில்லை. எனினும், வீட்டிலிருக்கும்பொழுது கூலியாட்களைச் சந்திக்க நேரின் "ஏன் இன்னும் அது ஆகவில்லை? முட்டாள், கழுதை" என்பவற்றோடு அது இது என்றும் பேசி வைவர். மிராசுதாரரின் சொந்தப் பண்ணை நடைபெறும் விதம் இது!

ஃ

இனி வாரம் குத்தகையோ, அவர்கள் அகப்பட்டதைச் சுருட்டிக்கொண்டு, "ஐயா! இவ்வளவுதான் விளைந்தது; இனி உங்கள் தயவு" என்று கூறி, அவற்றிலும் பாதி சுருட்டிக் கொள்வர். இவ்வித நிலைமையால் அந்த மிராசுதாரருக்குக் கடன் அதிகமாகி, வாரத்திற்கு விட்டிருந்த நிலத்தை விற்க முயன்றார். அஃதறிந்த அதே நிலத்தை வாரத்திற்குப் பார்ப்பவன் மிராசுதாரரிடம் சென்று, "ஐயா! இந்த நிலத்தை விற்பதாயிருந்தால் என்னிடம் தகவல் கொடுக்காமல் விற்க வேண்டாம்" என்றான். "என்ன, ஒரு பைசா முதல் இல்லாமல் என்னிடம் தோட்டம் பார்க்க வந்தவன்! இப்பொழுது இந்த நிலத்தையே விலைக்கு வாங்க முயல்கின்றனா?" என்று அந்த மிராசுதாரர் பிரமித்துவிட்டார். "எனக்கு இவ்வளவு நிலமிருந்தும் மிஞ்சவில்லை; உனக்கு எப்படிப் பணம் சேர்ந்தது?" என்று கேட்டார். "போ என்பதற்கும் வா என்பதற்கும் உள்ள வேறுபாடே என்னை இந்த நிலைமையில் வைத்திருக்கிறது. நீங்கள் கூலியாட்களிடத்தில் 'அந்த வேலையைச் செய்யப் போங்கள்; இந்த வேலையைச் செய்யப் போங்கள்' என்று கட்டளை யிட்டுவிட்டுப் போய்விடுகிறீர்கள். நானோ 'வாங்கள் வாங்கள்' என்று கூலியாட்களை அழைத்துக்கொண்டு அவர்களோடு போய் வேலை செய்கிறேன். இதுதான் பணம் சேர்ந்ததற்குக் காரணம் என்றான்.

(தொடரும்.)

பே. இராமாநுஜ ரெட்டியார்.

---

பொது ஜனங்கள் படிப்புத் தெரிந்தவர்களாக இருக்கவேண்டுமென்கிற அவசியத்தை அகில இந்தியா முற்றும் உணரும் நாளில் அதைப் பிடித்த பீடையும் தீரும்.




## Letter XXII.

### The Lady's Answer.

*Sir!*

I received your letter last night, and as it was on a subject I had not yet any thoughts of, your will not wonder when I tell you I was a good deal surprised. Although I have seen you at different times, yet I had not the most distant thoughts of your making proposals of such a nature. Those of your sex have often asserted that we are fond of flattery, and mightly pleased to be praised : I shall therefore suppose it true, and excuse you for those fulsome encomiums bestowed upon me in your letter ; but am afraid, were I to comply with your proposals, you would soon be convinced that the charms you mention, and seen to value so much, are merely exterior appearances which, like the summer's flowers, will very soon fade, and all those mightly professions of love will end at last either in indifference, or, which is worse, disgust. You desire me to

## 25-வது கடிதம்.

### அந்தப் பெண்ணின் உத்தரம்.

துரையே!

உமது காகிதம் எனக்கு இராத்திரி வந்து சேர்ந்தது. அது நான் இதுவரையில் நினைத்திராத சங்கதியைக் குறித்ததாய் இருந்தபடியால் எனக்கு மிகவும் ஆச்சரியமாயிருந்தது. இதற்கு நீர் அதிசயிக்க வேண்டியதில்லை. நான் உம்மைப் பலமுறை கண்டிருந்தாலும் இப்படிப்பட்ட வார்த்தை சொல்வீரென்று எவ்வளவும் நான் நினைத்தவளல்ல. உம்மைப் போல்வராகிய புருஷர் எங்களுக்கு முகஸ்துதி இஷ்டமென்றும், புகழப்படுவது எங்களுக்கு மிகவும் சந்தோஷமென்றும சொல்வார்கள். அப்படியும் இருக்கலாமாகையால் உமது கடிதத்தில் என்மேற் சொல்லிய இஷ்டமற்ற ஸ்துதிகளுக்காக உம்மை மன்னித்துக் கொள்ளுகிறேன். ஆனால், நீர் சொல்லிய வார்த்தைக்கு நான் இணங்குவேனாகில் நீர் குறித்தத்தனை கனமாக மதித்துப் பேசிய அழகுகள் வெளியழகுகளே யென்றும், அவைகள் கோடைப் புட்பம்போல வெகு சீக்கிரத்தில் வாடிப்போய்விட்டால். இத்தனை பலமான அன்புருகலெல்லாம் கடைசியில் அலக்ஷியமாயாவது, அல்லது பின்னும் கெடுதியாக வெறுப்பாயாவது முடியுமென்று கொஞ்சதனுள்

---

உள்ளுக்குள் எவ்வளவோ துவேஷங்கள், கபட நினைவுகள், வெறுப்புகள், கோப ஆத்திரங்கள் கோபுர உயரத்துக்கும் பொங்குகின்றன. வெளிக்கோ வெகு குளிர்ந்த மனதுடன் இனிய வார்த்தைகளைக் கொட்டுகின்றனர்.

inquire of my aunt concerning your character and family. You must excuse me when I tell you, that I am obliged to decline making any such inquiry. However, as your behaviour, when in my company, was always agreeable, I shall treat you with as much respect as is consistent with commen decorum.

அறியப்போகிறீரே யென்றும் எனக்கு மனஸ்தாபமா யிருக்கின்றது. உம்முடைய கீர்த்தியையும் குடும்பத்தையும் குறித்து எனது அத்தையம்மாளிடத்தில் என்னை விசாரிக்கச் சொல்லுகிறீர். அப்படிப்பட்ட விசாரணை நான் செய்யப்போகாது. நீர் அதற்கு என்னை மன்னிக்கவேண்டும். ஆகிலும், உமது நடக்கை நானும் வந்திருந்த இடங்களிலெல்லாம் இன்பமாய் இருந்தபடியால் சாதாரண ஆசாரத்துக்கொத்த மருங்குடன் உமக்கு நடந்துகொள்வேன்.

(கடிதம் முடியவில்லை.)

## பெயருக்கன்றி உருவத்துக்கு மதிப்பில்லை!

பிரபலமாயுள்ளவர்களின் பெயர்கள் மட்டும் வெளிக்குத் தெரியுமேயன்றி அவர்களின் உருவத்தைக் கண்டவர் ஒரு சிலரே. இப்பிரபலஸ்தர்களும் தங்களை வெளியிற் காண்பித்துக் கொள்வதில்லை. ஜனங்களும் அவர்களை எவரோவெனக் கேவலம் செய்து அலக்ஷியப்படுத்துவர். காங்கிரஸ் மகா சபையின் அக்கிராஸனர் ஒருவர் ஒரு ரயில் வண்டியில் ஏறப்போக, உள்ளிருந்தவர்கள் இடமில்லையென்று சொல்லி அவரைப் பிடித்துத் தள்ளினர். அவர் இன்னாரென்று யாருக்குத் தெரியும்? பெயருக்கு மதிப்பேயன்றி உருவத்திற்கு மதிப்பு அபூர்வமே. இன்னும் பிரபலஸ்தர்களின் ஸமீபத்தி லிருப்பவர்களோ—"இவர் மகா பெரியவரோ?—இவரையும் மதிப்பவருண்டா?" என்று அலக்ஷியம் செய்து எதிர்க்கவும் முற்படுவர். பின்னும் பழகியவர்களோ பிரபலஸ்தர்களை ஒரு சாமான்யத்தோற்றமாகவே நினைத்து நகைத்து இகழுவர். இவ்வளவு பழிப்பிலும் பிரபலஸ்தர்களின் நடை, செய்கை, குணம், முகம், கம்பீரம் எத்தகையோரையும் வசீகரிக்கவே செய்துவிடுகின்றது!

மனைவி காப்பி பலகாரங்கள் புசிப்பதெல்லாம் கணவனின் வருமானம் சுருங்காத வரையில்தான். அது சுருங்கில் எதுவும் சுருங்கிவிடும். பெண்கள் குடத்துடன் வெளியில் செல்லுங் காக்ஷி மனோகரமே. அதே குடத்துடன் ஆடவர்கள் செல்லினோ அந்த அழகை என்னென்று ஒப்பாரிவைத் தழுவது?




# போடு தோப்புக்கரணம்!

("கா—கூ" எழுதியது.)



"பெண்ணுக்குக் கலியாணமென்றால் வரதக்ஷிணைக் கவலைதான் பெரிய தொல்லை. அடப்பா! அது நமக்கில்லை. ஆகையால், நாம் அதிருஷ்டசாலிதான். நகை நட்டு மூட்டுக்களும் யதேஷ்டமாகப் போட்டிருக்கின்றோம். பாத்திரம் பண்டங்களும் சம்பந்திமார் கேட்கும்வரையில் வாங்கிக்கொடுக்கத் தடையில்லை. ஆனால், மாப்பிள்ளை தேடுவதுதான் பெரியவேலை. பெண்ணுக்குப்பொருத்தமான பிள்ளையாகத் தேடவேண்டுமே. சல்லடை போட்டு சல்லித்துப் பார்த்தாலும் மாப்பிள்ளைப் பொருத்தமுடையதாகக் கிடைக்கவில்லை. ஈசனே! இந்தக் கஷ்டத்திற் கென்ன செய்வது" என்று எக்கங்கொண்டு கூடத்தில் போடப்பட்டிருந்த ஊஞ்சலில் செட்டியார் உட்கார்ந்தார். இப்படிப்பட்ட மனசஞ்சலம் அதிக கஷ்டத்தைக் கொடுக்கக்கூடியதென்று நாம் சொல்லத் தேவையில்லை. அதிலும் தனது மகளின் கலியாணத்தின் பலனைச் செட்டியார் அவளுடைய எதிர்கால வாழ்க்கையின் சுகதுக்கங்களை ஒருவாறு நிர்ணயிக்கவேண்டியவராக விருக்கின்றார். ஆகையால், அதிகமான பரிசீலனையின் பிறகே ஒருவனைத் தனது மருமகனாகக்கொள்ள நிச்சயிப்பார். அதிலும்மற்றவர்கள் மாப்பிள்ளை தேடுவதைக்காட்டிலும் நம் செட்டியார் மாப்பிள்ளை தேடுவது ஓர் அபூர்வமான விதமாக விருக்கிறது. சகுனம் பார்க்கப் போகின்றாரா? இல்லை. குடும்பதேவதை உத்திரவு கேட்டு வரவேண்டுமா? இல்லை. ஜாதகப் பொருத்தம் பார்க்கவேண்டுமா? அதுவும் இல்லை. 'பணப்பொருத்தம் சரியாக இருந்துவிட்டால் எல்லாம் சரிப்பட்டுவிடும்' என்று துணிவு செய்துகொண்டார். ஆயினும், பெண்ணுக்குத் தக்க மாப்பிள்ளை—? பெண்ணுக்கு வயது பதினேழானபோதிலும் தகப்பனைவிட நாலங்குலம்—அதாவது, ஐந்தேகாலடி—உயரமுள்ளவள். அதற்குத் தகுந்தாற்போல் சுற்றுவட்டத்திலும் வளர்ச்சி உள்ளவள் அல்ல. ஆகையால், அவ்வளவு உயரமான மாப்பிள்ளை கண்டுபிடிக்க வேண்டுவதுதான் செட்டியாரைத் தொந்திரவு படுத்துவது! அதிலும் இருந்திருந்து ஒரு பெண்ணுக்குக் கலியாணம் செய்வதென்றால் இளைய தாரமாக ஒருவனுக்குக் கொடுக்க இஷ்டமில்லை. இன்னும் மாப்பிள்ளையும் இருபது வயதிற்கு மேற்படாதவ

---

சரியான சந்தர்ப்பத்தில் சரியான காரியத்தைச் சரிவரச் செய்யத் தயங்கக்கூடாது. பிறகு அந்தச் சமயம் எதிர்படுவது துர்லபம்.

ளுக விருக்கவேண்டும். அதற்கதிக
மானவனுக விருந்தால் ஒருக்கால்
உலகவாழ்க்கையறிவுதெரிந்து கெட்ட
நடத்தை யுடையவனுக விருக்கக்
கூடும். முக்கியமாகப் பெண்ணின்
உயரத்திற்குச் சரியாகக் குறைந்தது
ஐந்தேகாலடி உயரமுள்ளவனுக
இருக்கவேண்டும். இவ்வித பொருத்
தங்களைத்தான் பார்த்து யோசிக்கின்
றுரே தவிர கர்னுடகப் பழக்கங்களைக்
கொண்டு ஜாதகக் கட்டுகளையும் எட்
டுச் சுவடிகளையும் கட்டிக்கொண்டு
அழவில்லை. இவ்வளவு நேரம் ஊஞ்ச
லில் உட்கார்ந்து சுற்றுமுற்றும்
பார்த்ததில் ஒருமாப்பிள்ளையும் தென்
படவில்லை. தன்னைச் சுற்றிலுமுள்ள
கட்டிலையும் மேஜையையும் கண்ணுடி
யையும் படங்களையும் பார்த்துத்தான்
என்ன பயன்? ஒன்றுமில்லை. சரியான
மாப்பிள்ளையைத் தேடக்கூடிய வழி
யைக்கூட அவைகளில் எதுவும் மன
தில் எழச்செய்யவில்லை. அங்கு
மிங்கும் நோக்கிச் சலிப்புக்கொண்டு
கூரையை நோக்கினர். சூரியன்
சாயும்வேளையாதலால் கூரையிலுள்ள
ஒரு துவாரத்தின் வழியாகச் சூரிய
னுடைய கிரணங்கள் செட்டியா
ருடைய முகத்திற்கு எதிரே விழுந்
தன. இருண்ட கூரையில் அவ்
வொளியின் தோற்றம் அமாவாசை
தினத்தில் சந்திரனைக் கண்டதுபோ
லிருந்தது. சாதாரணமாகக் கவலை
கொண்ட ஒருவன் ஆழ்ந்த யோஜனை
யுடன் உயர நோக்குவானேயானுல்
ஏதாவது ஒரு புதிய யோசனை மண்
டையைப் பிளந்துகொண்டு திடீ
ரென்று கிளம்பும். அதைப்போலச்
செட்டியாரும் சஞ்சலத்துடன் உயர
நோக்கி யோசித்தார். அதிலும்
இருட்டிலே ஓர் ஜோதியைக் கண்
டார். 'பனிக்குச் சனியனுகச் சூரியன்
தோன்றுவதுபோல' அவருடைய
கவலையைப் போக்க ஓர் யோசனையும்
தோன்றிற்று. "நம்மவரில் பெண்
வீட்டார் மாப்பிள்ளை தேடுவதேது?
பிள்ளையல்லவோ பெண் தேடவேண்
டும்! நம் மகளையும் எவராவது வந்து
கேட்கட்டுமே! நம் பெண்ணை நன்று
கத் தெரிந்தவர்தானே அவளை மணம்
பேச வருவார். தமது பிள்ளைக்குப்
பொருந்தாதென்று தெரிந்தவர் நம்
மிடம் வரமாட்டார். ஆகையால், நம்
மிடம் வருபவர்களுடைய பிள்ளையின்
அளவு தெரிந்தால் நம் பெண்ணுக்குப்
பொருந்தும் பொருந்தாதென்று
முடிவு செய்துகொள்ளுவது சுலபம்.
இதற்கேன் வீணுக இவ்வளவு கவ
லைப்பட்டோம்" என்று நினைத்தார்.
ஆகவே, அன்றுமுதல் தன்னிடம்
வரும் மணமகன் ஒவ்வொருவருடைய
அளவையும் "நிதானித்து"த் தன்னு
டைய மகளுடைய உயரத்திற்குப்
பொருந்துமாவென்று பார்த்துக்
கொண்டிருந்தார்.

ஃ

இவர் தமது பெண்ணைப்பற்றி
வீணுகக் கவலைப்பட்டது போல,
அடுத்த ஊரில் ஓர் செட்டியார் தனது
மகனைப்பற்றி உண்மையாகவே கவலை
கொண்டிருந்தார். இருவரும் "கலி
யாணம்" என்னும் ஒரே விஷயத்
தைப்பற்றிக் கவலை கொண்டார்களே
யானுலும் அவை வெவ்வேறு வித
மான கவலை. பெண்ணுக்கும் பிள்
ளைக்கும் எவ்வளவு வித்தியாசமோ
அவ்வளவு வித்தியாசம் இவ்விருவ
ருடைய கவலைகளுக்குமுண்டு. ஒரு
வர் 'பெண்ணுக்குக் கலியாணம்
செய்ய முடியவில்லையே' என்று

---

நம்முடைய உண்மை மதவுணர்ச்சியை நழுவவிட்டு, வெளி வேஷங்களை
வெகு கருத்தாகப் போற்றுவதில் பயன் என்னவோ? மனத்தைப் பதியவைக்
காத பூசனையும் பூவும் எதுக்கோ? மேற்பூச்சு நிற்குமா? இது நலம் தருமா?

வங்கினார்; 'சரியான மாப்பிள்ளை கிடைக்கவில்லையே' என்று கலங்கினார்; 'விதிவசமே' என்று தயங்கினார். மற்றொருவர் 'எத்தனையோ பெண்கள் ஊரிலிருந்தும் நம் மகன் கலியாணம் செய்துகொள்ளுவதிலேயே மனத்தைச் செலுத்தவில்லையே' என்று சிந்தித்தார். 'தகுந்த பெண்களையுடையவர்கள் நம் தயவைப் பார்த்து நின்றுகொண்டிருந்தாலும் தலை நிமிர்ந்து பார்க்கவில்லையே' என்று அயர்ந்தார். என்ன விந்தை! இவர் அவ்வூரில் ஒரு பெரிய வியாபாரி—மளிகை வியாபாரம். பணம் சேர்ப்பதில் தகப்பனும் மகனும் அதிக ஒற்றுமை. செலவு செய்வதென்றால் மிக வேற்றுமை. காலையில் கடை திறந்ததுமுதல் இரவு எட்டு அல்லது ஒன்பது மணிவரையில்—கடைபூட்டும் வரையில் திராசுமுள்ளடியில் ஒருவரும், 'கல்வாப்'பெட்டியடியில் ஒருவருமாக உட்கார்ந்துகொண்டே யிருப்பார்கள். பூ முதல் புளிவரையில் உள்ளே வருவதானாலும் தகப்பனிடத்தில் விலையையும் மகனிடத்தில் எடையையும் சொல்லிவிட்டுத்தான் செல்லவேண்டும். இதன் பயன் என்ன? வியாபாரத்தில் தகப்பனைப்போலவே மகனும் அதிக தேர்ச்சி யடைந்தான்; பணம் சேர்க்கும் வழிகளை அதிவிரைவில் தெரிந்துகொண்டான். ஆனால், ஒன்று. வெளி உலக வாசனை கொஞ்சமும் கிடையாது. 'தற்காலக் கல்வியினால் பய னில்லை' என்று உணர்ந்து, தன் மகனை வியாபாரத்தில் தேர்ச்சியடையச் செய்வதுதான் உத்தமம் என்ற உயர்ந்த நோக்கத்துடன் தன் மகனை எட்டு வயதிலேயே கடைக்கு அழைத்துக்கொண்டார். அன்றுமுதல் இன்றுவரையில் வீட்டையும் கடையையும் தவிர வேறு எந்தவிடத்திற்கும் செட்டியார் மகன் சென்றது கிடையாது. டிராமா, சினிமா, சர்க்கஸ் முதலியவைகள் எதையும் பார்த்ததில்லை. ஒருக்கால் அவைகளைப்பற்றிக் காதால் கேட்டிருக்கலாம். அதையும் நிச்சயமாகச் சொல்ல முடியாது. ஏனெனின், அவன் வசிப்பது ரயில் முதலிய நவீன போக்குவரத்துச் சாதனங்களும் "நாகரீகம்" பரவிய நகரங்களும் சமீபத்திலில்லாத ஓர் கிராமம். சரீர வளர்ச்சியிலும் வஞ்சனையில்லாது வளர்ந்திருந்தான். உயரத்தில் வளரவில்லை. ஆனால், சுற்றளவு மட்டில் நாளுக்குநாள் அதிகரித்து வந்தது. வருஷக்கணக்காக ஒருவன் சாப்பிடுவதையும் கடைக்குப்போய் உட்காருவதையும், வீட்டுக்கு வந்து உறங்குவதையும் தவிர சரீரத்திற்குச் சிறிதேனும் சிரமம் கொடுக்கக்கூடிய வேலை செய்யாது நெய்யும் பாலுமாகக் காலந்தள்ளி வருவானேயானால் சரீரம் "மாமிச பர்வத"மாக வளருமென்று நாம் சொல்லவேண்டுமோ!

ஃ

"குழந்தைக்கு"? உலகவாழ்க்கை—இல்லற ஞாபகமே இல்லாதிருந்த போதிலும் பணம் சம்பாதிப்பதில் அதிக ஊக்கம் காட்டிவருவது தகப்பனுக்கு மிகச் சந்தோஷமாகத்தானிருந்துவந்தது. ஆனால் நாளடைவில் அதுவும் மாறிவிட்டது. நாளுக்கு நாள் வயது அதிகரித்துக்கொண்டே வருகிறது. அவனுக்குக் கலியாணம் செய்யாமல் இனியும் தாமதிப்பது சரியல்ல. தனக்கோ வயது நாற்பதுக்கு மேலாகிவிட்டது. இக்காலத்தில் மனிதன் ஐம்பது வருஷகாலம் ஜீவித்

தூய்மையுடன் உள்ளவர் நியாயாதிபதியின் வேலையைக்கூடத் தமக்குப் பாரமானதாய்க் கருதுவர்.

திருப்பதே அரிதாகவிருக்கிறது. ஆகையால், இப்பொழுது ஒரு மருமகள் வராவிட்டால் தனது ஆயுட்காலத்திற்குள் பேரன் பேத்திகளைக் கண்டு களிப்பது எக்காலம்? அதிலும் "பெரிசான" பெண்ணைத்தான் பிடிக்கவேண்டும். ஏனெனில், 'விபர'மறியாத பெண்ணைக் கலியாணம் செய்தால் அப்பெண் பருவமடைந்து பக்குவம் வருவதற்குள் தான் 'மலையேறி'விடக்கூடும் என்று பலவாறு எண்ணித்தனது இனத்தினரிடையே இருக்கும் பெண்களின் ஜாபிதாவைப் புரட்டினார். நம் மிராசுதாருடைய பெண்ணைத் தவிர வேறு எதுவும் அவருடைய மனதிற்குப் பிடித்தமாகத் தோன்றவில்லை. ஆகவே 'எவ்விதத்திலாவது அப்பெண்ணை நம் மகனுக்கு மணம் செய்து முடித்துவிட வேண்டும்' என்று நிச்சயித்துவிட்டார். சகுனம் பார்ப்பதிலும் ராகுகாலம், தியாச்சியம், மரணயோகம் முதலியவைகளில்லாத சுப முகூர்த்தம் பார்த்துத் தெய்வவந்தனை வழிபாடு செய்து தாமதிப்பதிலும் அவ்வளவு திருப்தி செட்டியாருக் கில்லையானாலும் தன் வீட்டிலுள்ள கிழப் பிணங்களின் வார்த்தைக்குப் பயந்து ஒரு தேங்காயைக் கையிலெடுத்துக்கொண்டு தெருவில் வந்து சகுனம் பார்த்தார். பகல் இரண்டு மணி வேளை. அதிலும் சித்திரை மாதம். சூரிய உஷ்ணத்தின் உக்கிரகத்தை இன்னதென்று சொல்லத் தேவையில்லை. செட்டியாரைத்தவிர வேறு எவரும் வெளியில் தலை காட்டவில்லை. ஒரு காக்கையைக்கூடக் காணவில்லையென்றால் செட்டியாருக்குச் சகுனத்தின் சுத்தத்தைப் பற்றிச் சொல்லவேண்டுமோ! தேங்காயுடன் வீதிக்கடைசியிலுள்ள கோவிலுக்குச் சென்றார். "வீட்டைவிட்டு வெளிக்கிளம்பும் வரையில் தான் சகுனம் பார்ப்பது முறை. ஆனால், இவ்வளவுதூரம் அபசகுனம் காணாமல் வந்துவிட்டோம். இது போதாதா? ஒன்றரையணா பொறுமானமுள்ள தேங்காயையும் இங்கு உடைக்கவேண்டுமோ—அட பாவமே! கலியாணமென்றால் கைக்காசு சிலவு தான் போலிருக்கிறது. ஆனால், நமக்குச் சந்தோஷம் கொடுக்கக் 'குழந்தை'க்கு ஓர் குழந்தை பிறந்தால்—" என்று சமாதானம் செய்துகொண்டு தேங்காயை உடைத்து அடிமடியில் கட்டிக்கொண்டு பிரயாணப்பட்டார்.

(மறு ஸஞ்சிகையில் முடிவு.)



ஷேக்ஸ்பியர் மகா கவி தரித்திரத்தில் அடிபடாமலும், நாடகக் கூத்தாடியாகிப் பல கஷ்டங்களை அடையாமலும், பொல்லாத மனைவிக்குதான் நாயகனாகாமலு மிருந்தால், அவர் ஒரு அனுபவ ஞானியாகவும் கலாவல்லவராகவும் ஆகியிருக்க முடியாது. படப்படத்தான் அறிவு விசாலிக்கிறது. ஒவ்வொரு வீழ்ச்சியும், ஒவ்வொரு சம்பவமும், ஒவ்வொரு 'சோர்வு'ம் ஒவ்வொரு நூதன அறிவு பெற ஒரு ஏணி.

---

சந்தோஷமாய் இருக்கச் செல்லக்குழந்தைகளுடன் போன இடத்தில் குழந்தைகளுக்கு ஜ்வரம் வந்துவிடுகிறது. சந்தோஷமும் மறைந்துவிடுகிறது.



# பத்திரிகை ஆராய்ச்சி

| “குடியரசு” வாக்கியங்கள். | அவ்வாக்கியங்களுக்கு மறுப்பு. |
|---|---|
| 30-3-30 “குடி அரசு” வெளியீடு. | 25-4-30 “இந்திய மித்திரன்” நீதி வாக்கியங்கள். |
| 1. அறிவைக் கெடுப்பது ஆத்திக மதமே | 1. அறிவை வளர்ப்பது ஆஸ்திக மதமே |
| 2. ஆலயம் தன்னை அப்புறப் படுத்து | 2. ஆலயந் தொழாதார் அருநர காழ்வார் |
| 3. இந்து மதத்தால் இடுக்கண் விளையும் | 3. இந்து மதமே இடுக்கண் களையும் |
| 4. ஈசன் என்பது மோசம் செய்வது | 4. ஈசனை யறியார் இழிகுலத் தவர்கள் |
| 5. உண்மைத் தெய்வம் உலகுயி ராகும் | 5. உண்மைத் தெய்வம் உயர்பர சிவமே |
| 6. ஊக்கம் என்பது உயிரினும் பெரிது | 6. ஊக்கமோ டெதையும் நீக்குவோன் மிருகம் |
| 7. என்றும் மக்களை ஒன்றாய்க் கருது | 7. என்று முயிர்கட்கு இடர்விளை யாதே |
| 8. ஏழை மக்களை ஏறிட்டு நோக்கு | 8. ஏழையைக் காப்போன் இறையருள் பெறுவன் |
| 9. ஐயம் தெளிந்து செய்வன செய்க | 9. ஐயமில் லாமல் அறவினை செய்மின் |
| 10. ஒற்றுமை இருப்பின் உலகம் செழிக்கும் | 10. ஒற்றுமை செய்வோன் ஒன்றையு மிகழான் |
| 11. ஓதி யுணர்ந்து நீதியைக் கைக்கொள் | 11. ஓதி யுணர்ந்தோன் ஆதியை யறிவான் |
| 12. ஔவை வாக்கிலும் ஆராய்ந்து செய்க | 12. ஔவைசொன் மறவான் ஔவிய மில்லான் |
| 13. கல்லுத் தெய்வம் பொல்லாங்கு செய்யும் | 13. கல்லினுட் கடவுளைப் புல்லர்க ளறியார் |
| 14. காசை வீணாய்க் கரியாக் காதே | 14. காசதைப் பெற்றோர் கடவுளை யறிமின் |
| 15. கிழிந்த பஞ்சாங்கம் ஒழிந்தால் நன்று | 15. கிழிந்தபஞ் சாங்கங் கீழ்மே லுண்டாம் |
| 16. கீழ்மைக் குணத்தை வாழ்வி லகற்று | 16. கீழ்மைக் குணத்தோர்க் கிட்டவும் போகேல் |
| 17. குற்றம் களைவர் கற்றுணர்ந் தவர்கள் | 17. குற்றங் கூறுவோன் சுற்றம் பாழாம் |
| 18. கூற்றுவர் நமக்கு கொடும்பார்ப் பனரே | 18. கூற்றுவன் பிறரைத் தூற்றுவோ னாகும் |
| 19. கெதியிழந் தாலும் மதியிழக் காதே | 19. கெதியிழந் தாலும் முதுநெறி தவறேல் |
| 20. கேள்வி ஞானம் வாழ்வில் நல்லது | 20. கேள்விஞா னங்கொடு கெதியிழக் காதே |
| 21. கைம்பெண் துயரம் கடிதில் அகற்று | 21. கைம்பெணைக் கூடும் காலிசொற் கேளேல் |
| 22. கொள்வன கொண்டு தள்வன தள்ளு | 22. கொள்வன பொருளைத் தள்வன கதையை |
| 23. கோவில் நாட்டைக் கேவல மாக்கும் | 23. கோவிலில் லாவூர் பாவிகட் கிடமாம் |
| 24. சமத்துவம் நிறைந்தால் சமூகமுன் னேறும் | 24. சமத்துவ நிறைந்தோர் சாஸ்திர முணர்ந்தோர் |
| 25. சிக்கன வாழ்வைக் கைக்கொள் வாயே | 25. சிக்கன வாழ்வு சிவனருள் பெறுதல் |

26. சீற்ற மொழிந்தால் ஏற்ற முறலாம்
27. சுயமரி யாதையே சுதந்தர வாழ்வு
28. சூது நிறைந்தது வேதமென் றறிந்து கொள்
29. செத்தவ ருக்குத் திதிகொடுக் காதே
30. சேத்திர மென்று செலவுசெய் யாதே
31. சொர்க்க மென்பது திட்டுப் பறிப்பதே
32. சோதிட மகற்றின் நீதிடம் பெறலாம்
33. தண்ணீர் யார்க்கும் தரணியில் சொந்தம்
34. தாழ்ந்தவ ரென்று ஜாதியி லில்லை
35. திருவிழா மனிதரைத் தெருவில் விடுவதே
36. தீர்த்த மென் றுநீ திரிந்தலை யாதே
37. துக்க மென்பதை இக்கண மகற்று
38. தூய மனத்தால் தீயவை யகற்று
39. தெய்வத்தை நினைத்து உய்வது கெடுதி

26. சீற்ற மொழிந்தோர் தூற்றுதல் செய்யார்
27. சுயமரி யாதை இயமனென் றறிமின்
28. சூது நிறைந்தோன் வேதம துணரான்
29. செத்தவர்க் கன்று திதிபிதுர்க் கறிமின்
30. சேத்திரஞ் சென்றால் பாத்திர னுவான்
31. சொர்க்க மென்பது தூயவர் வாழிடம்
32. சோதிடங் கற்றோர் நீதியை யறிவார்
33. தண்ணீ ரின்குணஞ் சார்ந்தவர் பெரியோர்
34. தாழ்ந்தவ ரென்பதை ஆழ்ந்துபார் தெரியும்
35. திருவிழா மக்கட் கொருமை யளிக்கும்
36. தீர்த்த மென்பது நாத்திக ரறியார்
37. துக்கந் தருவது சுயமரி யாதை
38. தூய மனத்தோர் தீயன பகரார்
39. தெய்வ மிகழ்ந்தோர் உய்வதே யில்லை
40. தேயத்துள் ளாரிதைத் தேர்ந்திடு வீரே

"உலக ஊழியன்,"
சே. அ. லா. நா. அரு.

## ஒன்று காதல்—மற்றொன்று பாசாங்கு !

"அழகிய பெண்மணி யொருத்தியைக் காதலித்தேன். அவளது மெல்லிய குரல், இளகிய மனது, அழகிய வதனம், துள்ளிக் குதித்து நடக்கும் நடை, ஒய்யாரப் பேச்சுகள், ஸரச ஸல்லாபம் இவற்றை எவ்விதம் மறப்பேன்?"

"காசு பணம் வேண்டியகாலை மிகு புன்னகை மிகுந்து பூசனை புரிவாள். தான் ஏதாவதொன்றை விரும்புகையில் மிகமிக சரஸமாகி அபிநயித்துக் கொஞ்சுவாள். என் கையிற் பண மில்லாவிடினும் கடன் பெற்றேனும் கட்டழகியின் அன்புபெற நாடித் தந்துவிடுவேன். காரியம் தீர்ந்ததும் தூரப் போய்விடுவாள். வேறு மனுஷியாய் விடுவாள். அருகே வராள். அழைக்கினும் நெருங்காள். இது ஏனோ? என்ன மாயமோ! அவள் காட்டுவது காதலா? பாசாங்கா?"

விவேகம்
விநோதம்
விசித்திரம்
விகடம்




அநுபவம்
அற்புதம்
ஆச்சரியம்
ஆநந்தம்

# கருப்பு ! கருப்பு ! கருப்பு !



என்னடா எப்பா, ஏதடா எப்பா, எப்படிடா எப்பா! விகடன் ஏகப்பட்ட கூச்சல் போட்டுக் கொண்டு 'கருப்பு கருப்பு கருப்பு' என்று ஓடி வந்தானே; ஊருக்கு-உலகத்திற்கு-தேசத்திற்கு-தேசாந்திரத்திற்கு-கருப்பு கருமாயம் பஞ்சம் வந்து விட்டதோ என்னமோவென்று அங்கலாய்ப்புப் படுவீர்கள். அப்படிப்பட்ட கருப்பு அல்ல விகடன் சொல்ல வந்தது! விகடனுடைய தொனப்பு வீண் தொனப்பல்ல, காரியமான தொனப்புத்தான். கவனமாய்க் கேளுங்கள்.

ஃ

முதலாவது—இக்காலத்திலே இல்லாத பொல்லாத சாஸ்திரப் படிப்பினைகளும், சட்டகல்வி முட்டகல்வியும் மிஞ்சிப்போய், தெய்வத்திற்கே கணக்குப்போட்டுச் செட்டான பூஜைகளை அளந்து கொண்டுபோவதில் உண்மையான தெய்வபயம் என்பது அதாவது பக்தி பரவசம் என்பது கருப்பாய்ப் போச்சுது! போகிற வழியிலேயே கால் செருப்புடனேயே கொஞ்சம் கையை அப்படித் தூக்கிவிட்டால், அது தனக்கு எதிர்ப்பட்ட கோவிலுக்குப் போடுகிற கும்பிடு என்றும், 'அந்தக் கோவில் சாமிக்கு அவ்வளவு கும்பிடு போதும்' என்றும் எண்ணும்படியாய் விட்டது! கோயிலுக்குள்ளேயே அக்கிரமச் செய்கைகளுக்கும் கண்ணடி வித்தைகளுக்கும் துணியலாச்சுது! இருக்கிற உறவினர்களை யெல்லாம் உதறிவிட்டு இனி வரப்போகிற புது மனைவியைச் சேர்ந்தவர்களுடன் பந்தத்துவம் கொண்டு கொஞ்சுதற்கு நினைத்த கதையாக, ஊருக்குள் உள்ள சாஸ்திரங்களையும் சகலத்தையும் ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு குறை சொல்லி ஒதுக்கிவிட்டு அவற்றி லில்லாத கடவுளை—மெய்ப்பொருளை இனித் தேடிச்சென்று கிட்டப் போவதான வெறும் வாய்ப்பேச்சுகள் மிகுந்துப் போச்சுது! தேர்திருவிழா நாட்களில் மாய்மாலக் கும்பிடுகள் போடுவதும், பிரார்த்தனைகள் செலுத்துவதும், பேர் பிரஸ்தாபம் பிரபலப்

---

தலையும் வேண்டும்; காலும் வேண்டும்; மனைவியும் வேண்டும்; மகனும் வேண்டும்; பேரனும் வேண்டும். இவ்வளவுக்கும் 'அது' இருக்கவும் வேண்டும்.

படுத்திக்கொள்ளவும் தெய்வ வழிபாடு கள் ஒரு துணை வழியாய்ப் போச்சுது! ஆண்டவன் கேட்கிற அந்த உள்ளத் துச் சுத்தியையும் அதன் பரவசத் தையும் எவரும் கொள்ளக் காணோம்! தெய்வ பக்தி ஆசாரங்களுக்குப் பேர் போன இடமே அக்கிரமங்களுக்கும் பேர்போன இடமாகிவிட்டது!

ஃ

இரண்டாவது—எவ்வளவோ கஷ்டத்தோடு பெற்று வளர்த்த தாய் தகப்பன்மார்களைப் பாத பூஜை செய்வது கருப்பாய்ப் போச்சுது! ஆனால், அவர்கள் பயந்து நடுங்கும்படியான மூர்க்காவேஸத்தைக் காட்டுதலும், அசட்டை பண்ணுதலும், கஞ்சித் தண்ணிக்குக் காற்றாய்ப் பறக்க விடுதலும், பிச்சையிரந்து தின்னப் பார்த்துக்கொண்டிருப்பதும் நயத் துப் போச்சுது! பெற்ற தாயையே பெற்ற பெண்கூட எதிர்க்கும் காலமாய்விட்டது! ஆனால், கண் மூடிவிட் டால் மட்டும் அப்போது அமுகைப் பூஜைகளைத் தொடங்கிக் கொள்ளுவதும் ஒரு வழக்கமாகிவிட்டது!

ஃ

மூன்றாவது—உண்மையான தெய்வத் தொண்டர்களாகிய குருக்களைக் கௌரவப்படுத்தி ஸ்தோத்தரிப்பது என்பதும் கருப்பாய்ப் போச்சுது! குரு என்பது கவுரவமென்கிற பதத்தி னின்று உற்பத்தியானதால் அவர்கள் கௌரவத்திற்குரியவர்களென்ற எண்ணம் எங்கோ மறைந்து போச்சுது! ஆனால், "குரு நின்று மூத்திரம் பெய்தால்" சிஷ்யன் வளைய வளையப் பெய்கிறான் என்கிற பழமொழிப்படி குருக்களுடைய போதனை, கட்டளை, ஆசாரம் முதலானவைகளில் குற்றம் பிடிக்கிறதும், அவர்களை ஒரு கூலிகள் போல் அசட்டையாய்ப் பாவிப்பதும், 'டேம் நான்சென்ஸ்'—'என்ன ஓய்—ஏன் ஓய்'—என்று கேவலமாய்ப் பேசுவதும், மிஞ்சினால் திட்டுவது முதலான இவைகள் நயத்துப் போச்சுது! அதில் என்ன பயனோ?

ஃ

நாலாவது—எந்த மதகுருக்கள் போதகர்களாயினும், மூன்றாசையும் வெறுத்தோம் என்று வாக்குத்தத்தம் (பிரதிக்கினை) கொடுத்த அந்த இரக்கத்தன்மையென்பது அடியுடன் கருப்பாய்ப் போச்சுது! ஆனால், "கோவில் கட்டுகிறேன்; சத்திரம் கட்டுகிறேன்; குளம் வெட்டுகிறேன்; மடம் கட்டுகிறேன்; குரு பூஜை—கும்பாபிஷேகம்—அன்னதானம் பண்ணப் போகிறேன்" என்று பலபேரிடத்திலும் பட்டி எடுத்துக்கொண்டு போய்ப் பணம் சண்டுகிற அந்த ஒரு பெரிய வேலையை மேற் போட்டுக் கொண்டு எந்நேரமும் 'பணம், பணம்' என்று பணம் பிடுங்கிகளாய்ப் பணப் பேய்ப் பிடித்தவர்களாய்ப் போயிருப்பது நயத்துப் போச்சுது! தங்களைப் புண்ணிய உடம்பாயெண்ணி மற்றவர்களை மிலேச்சர்களாய் இழிவுபடுத்துகிற வீண் ஜம்பம் மட்டும் இன்னும் இருக்கிறது!

ஃ

ஐந்தாவது—ஸ்திரீகள் தம் புருஷர்களைத் தெய்வம்போல் பாவித்துப் பணிவிடை புரிந்து, அவர்களை "எல்லாவற்றிலும்" பராமரித்துப் புருஷர் சுகத்தைப்பற்றியே, அவர்கள் எண்ணத்தையே சதா மனதில் மனஸ்சரித்துக்கொண்டு வாழுகிற அந்தக் கற்புத்தன்மை மெத்த கருப்பாய்ப்

---

ஹோட்டல் பக்ஷணங்களின் ருசி வீட்டில் இல்லை. வீட்டில் காட்டும் அன்பு ஹோட்டலில் இல்லை. ஹோட்டல் ஒரு தாசி வீடுபோல் பணம் தந்தவரைக்கும் சுகமும் ருசியும் கிடைக்கும். வீட்டில் காட்டும் அன்பு அகப்படா,

போச்சுது! தான் கெட்டதை மறைத்து வாழுவதே கற்பாய்ப் போச்சுது! எங்கும் இப்படியென்று விகடன் சொல்லவில்லை. ஆங்காங்குத் தென்படுகிற அந்தந்தக் கருப்புப் புள்ளிகளையே இங்கு இழுத்துத் தொனப்பியது! கணவனைத் தங்களுக்குச் சமானமானவன் அல்லவென்பதும், தங்களுக்கு ஊழியன் என்பதுமான நினைப்புகள்தான் தடித்துப் போச்சுது! பூனை நாய் போல் சீறியும், வெடுக்குமுகம் காட்டியும், தூஷித்தும், நிந்தித்தும், அரோசிகமான அசங்கிதச் சொற்களால் திட்டியும், அடுத்தடுத்து வீட்டை விட்டு வெளியோடிப் போய்த் தொந்தரவு கொடுத்தும், வீட்டுச் சாமான்களைத் திருடி விற்றும், கணவன் மறந்து வைத்ததை அமுக்கிவிட்டும் தின்று கொழுத்து விளங்குவதும் பெருகிப் போச்சுது! இவ்விதமே புருஷர்கள் தம் மனைவிகளிடம் செய்கிற அக்கிரமங்களும் ஐயோ நயத்துப் போச்சுது!

ஃ

ஆறவது—அனுபவசாலிகளும், அறிவில் முதிர்ந்தோரும், வயது முதிர்ந்தவர்களும், அடக்கமுடையவர்களும், சந்நியாசி முதலிய ஒழுக்க வாழ்வடைந்தவர்களுமாகிய பெரியோர்களைக் கையெடுத்துக் கும்பிடுவதும், மனங் குவிந்து நமஸ்காரம் புரிவதும், பாதத்தில் விழுவதுமான மரியாதைகள் செய்து அவர்களின் ஆசீர்வாதத்தைப் பெற்றுக்கொள்வது வெகு தூரம் கருப்பாய்ப் போச்சுது! ஆனல், ஊளைக்கும்பிடுகள் போட்டுவிட்டு, அதிலும் விசைப்பொம்மை கையைத் தூக்கி இறக்குவதுபோலத் தான் ஒரு பொம்மை மாதிரியாய் வாயிலே ஒரு சொல்லும் கிளம்பாமலே கையால் மாத்திரம் சரணக்குறி காட்டிவிட்டு, அடுத்தாப்போலவே பகடி பரிகாச வார்த்தை, தறிதலையான பேச்சு, முரட்டுச் சொல் முதலானவற்றைப் பேசிக்கொண்டும், எந்த ஒரு புத்திமதியையும் தட்டி எதிர்த்துக்கொண்டும் நடக்கிற அந்த நடவடிக்கைகள் தான் எங்கும் நயத்துப் போச்சு!

ஃ

ஏழாவது—நன்ருய் வாசித்துணர்ந்த தமிழ் வித்வான்களை ஆதரிப்பதும், அவர்களின் அருமை தெரிந்து அவர்களை மதிப்பதும், அவர்களுக்குப் போதுமான சன்மானங்கள் புரிவதும், அவர்களைப் பெருமைப்படுத்துவதும், அவர்களின் கல்வியைப் பிரகாசப்படுத்துவதும், அவர்கள் உலகத்துக்கு வேண்டிய விலையுயர்ந்த பொருள்களில் ஒன்றென்றெண்ணுகிற ஒரு கொள்கையும் ரொம்ப ரொம்ப கருப்பாய்ப் போச்சுது! ஆனல், இங்கிலீஷ் பட்டதாரிகளைத் தொட்டுக் கொள்வதும், இந்த பி. ஏ (25-ரூபாய் சம்பளம்) பேசுகிருர், அந்த எம்-ஏ (40-ரூபாய் சம்பளம்) எடுத்து வீசுகிருர், இந்த புரோபஸர் லெக்சர் கொடுக்கிருர், அந்த டாக்டர் ஸ்பீச் பண்ணுகிருர் என்ருல்—அவைகள் தேவாமிர்தம் என்று எண்ணிவிடுகிறதும், அவர்களுக்கு நாக்கு சலாம், மூக்கு சலாம் போடுகிறதும், அவர்கள் காலாலிட்ட வேலையைக் கையால் ஏந்திச் செய்வதும், அவர்களே தேசத்தைக் காப்பாற்றுகிற தெய்வங்களென்று வெகுவாய் எண்ணிவிடுவதும், இன்னும் அந்த அதிகாரி, இந்த அதிகாரியின் விஜயமென்று ஆயிரம் ஆயிரம் செலவழித்து ஜோடினைகளைச் செய்து வரவேற்று, வந்தவரும் ஏதோ நாவுக்கு

தகப்பன் ஒரு குலமும், தாய் ஒரு குலமுமாக இருந்து இருவருக்கும் குழந்தையுண்டாகுமானல் இருஜாதிகளின் குணங்களையும் அக் குழந்தையிடம் பார்க்கலாமாம். வளர்ப்புக்குத் தகுந்தபடி அந்தந்த ஜாதிப்பற்று ஏற்படும்.

இனிப்பாய்ப் பேசி விட்டுத் தொலைய, ஒரேநாளில் பொங்கிப் பூரித்து வழி கிறதுமான ஆராதனைகள் தான் மெத்த மெத்தப் பெருத்துப் போச்சு!

ஃ

எட்டாவது—எட்டாக் கொம்புக் கும் அடிபோட்டு எட்டிப் பிடித்து விடுகிறதென்ற சுறுசுறுப்பும், விடா முயற்சியுடனுள்ள உழைப்பும் கருப் பாய்ப் போச்சு! உள்ளதில் திருப்தி யடைகிறதும், எங்கேயாவது எழுத் தாணி (பேனு) அசைக்கிற வேலையில் அமர்ந்துகொண்டு அம்மட்டில் அடங்கிவிடுவதான சோம்பேரித்தன் மைகளும் எங்கும் மலிந்து போச்சு!

ஃ

ஒன்பதாவது—சொன்ன வாக் கைக் காப்பாற்றுவதும், மறந்து வைத்ததை எடுத்துக் கொடுப்பதும், மற்றவரின் விருத்தியைத் தேடுவது மான நாணயம்—சத்தியம்—பரோப காரம் என்பவைகளெல்லாம் வெகு வெகு கருப்பாய்ப் போச்சுது!

ஃ

பத்தாவது — ஒருவரையொருவர் ஆதரிக்கிறதென்பதும், சேர்த்து வைத்துக் கல்வி கற்பித்து உயரத் தூக்கிவிட்டுப் பிறகு ஒரு குடும்பமாக உருப்பட வைக்கிறதென்பதும், வீடு தேடி வருவார் போவாருக்கு உண்மை யான உபசரணைகள் செய்வதென் பதும் மெத்த கருப்பாய்ப் போச்சுது!

ஃ

பதினொன்றாவது— உண்மையான நண்பனைத் தேடிப் பிடித்துக்கொள்வ தென்பதும், அவன் ஆபத்து ஸம் பத்துகளுக்கு அருந்துணையாயிருந்து உதவுவானென்பதும் அடியோடு கருப் பாய்ப் போச்சுது! இதற்குப் பதிலாக வெட்டிப் பேச்சாடும் வேலைமெனக் கிட்டவர்களும், ஏதாவது இரவல் பெற்றுச்செல்லக் கெஞ்சுகிறவர்க ளும், தங்கள் காரியத்துக்காக மிஞ்சி உறவு பிடிக்கிற காக்கை வித்தைக் காரர்களுமே பெருகிப் போனார்கள்!

ஃ

பன்னிரண்டாவது—பெற்றுப் போ கிற பணத்தையோ, பொருளையோ, சாமான்களையோ திருப்பிக் கொடுப்ப தென்பதும் கருப்பாய்ப் போச்சுது! எரிகிற வீட்டில் பிடுங்கினது லாப மென்றும், ஏமாறுகிற வரையில், அவன் கையிலுள்ளவைகள் நமக்கே யென்று அள்ளிக் கொள்ளுகிறதும், ஒன்றுக்கும் விலை கொடாமலே நக்கிச் சப்பி ருசி பார்க்கச் சுற்றிக்கொண்டு வட்டமிடுவதுமான தந்திரஜித்து வித்தைகள் தடபுடலாய்ப் போச்சுது!

ஃ

இன்னும் இந்த நாளிலே பிழைப் பதுங் கருப்பாய்ப் போச்சுது! வேண்டிக் கொள்கிறவர்களுக்குக் குழந்தை கருப்பாய்ப் போச்சுது! ஆசை வைத்த இடத்தில் அதுவும் கருப்பாய்ப் போச்சுது! நல்ல புஸ்த கங்களுக்கும் நல்ல மருந்துகளுக்கும் விலை கருப்பாய்ப் போச்சுது! எத்தனை பெரிய மனுஷ்யராலும் பல இடங்களில் யோக்கியதை கருப்பாய்ப் போச்சுது! உண்மையான உழைப் புக்கு விசுவாசம் கருப்பாய்ப் போச் சுது! குழந்தைகள் உள்ள இடத்தி லும், ஸரஸ்வதியுள்ள இடத்திலும் லக்ஷ்மியின் வாசம் கருப்பாய்ப் போச்சுது! தன்மீது யதார்த்த அன்பு வைத்தவர்களைத் தெரிந்து பதி லுக்குப் பதில் அன்பாய் நடப்பதும் கருப்பாய்ப் போச்சுது! செல்வம் பெருத்த இடத்தில் சர்ப்பம் கருப்

---

நீ எவ்வளவு செல்வவானாக இருப்பினும் சரி; அந்த ஏழை மனுஷ்யன் உன் முன்பு தன் தலை நிமிர்ந்திருக்கப் பார்ப்பானேயன்றி உன் ஆரவாரத்தை அவன் லக்ஷியம் செய்யவே மாட்டான். உனக்கு உட்பட அவன் பிறக்கவில்லை.

பாய்ப் போச்சுது! ஜனத்தலைவர்களுக்கு ஜெயில் வந்துவிடவே, நாற்காலி கௌரவ சுகமும் கருப்பாய்ப் போச்சுது! நல்ல வைத்தியமும் கருப்பாய்ப் போச்சுது! ஏழைகளுக்கு இடுவதும் கருப்பாய்ப் போச்சுது! எத்தனை லாட்டரிச் சீட்டுகளுக்குப் பணத்தை எண்ணிவிட்டும், லாட்டரி விழுவதும் கருப்பாய்ப் போச்சுது! ஓரிடத்தில் போய் ஒரு சில நாள் தங்கினேனென்பதும், அவர்கள் நமது பாரத்தைப் பளுவைச் சுமந்து உதவினார்களென்பதும் கருப்பாய்ப் போச்சுது! படித்தவர்கள் ஞானிகளாவதும் கருப்பாய்ப் போச்சுது. அதற்குப் பதிலாகப் பக்காக் குள்ளநரிகளாவதே மிஞ்சிப் போச்சுது! ஒழுங்காய்ச் சிறைப்பதும், வெளுப்பதும் கூடக் கருப்பாய்ப் போச்சுது! ஒருவனையொருவன் விழுங்கப் பார்ப்பதே மலிந்து போச்சுது! நம்ம பெண்டுகளின் சுலபமான பழய நகைகளும் கருப்பாய்ப் போச்சுது! இடுப்பிலே பருத்திச் சேலையும் கருப்பாய்ப் போச்சுது! பட்டு பட்டாவளிகளில் மயக்குப் பலமாகிப் பரவிப்போச்சுது! வெளிப்பேச்சு இனிப்பானாலும் உள்ளுக்கு மனம் கருப்பாய்ப் போச்சுது! காகிதத்தில் கொட்டுகிற அன்பும் வணக்கமும் நேரில் போகும்போது கருப்பாய்ப் போச்சுது! அந்த இடத்தை நம்பி இந்த இடத்தை அலக்ஷியம் செய்யப்போக, அந்த இடமும் கருப்பாகி, இந்த இடமும் வெடு வெடுப்பாய்ப் போச்சுது! ஆயிரம் கொடுப்பான், இரண்டாயிரம் கொடுப்பான் என்று எண்ணிய இடத்திலும், தூர்த்த ஸ்திரீகள் அவன் வாரிக் கொடுத்துவிடுவான் என்று அந்நிய ஆடவரை நம்பிய இடத்திலும் அடியோடு ஏமாற்றமாய்க் கருப்பாய்ப் போச்சுது! இன்னுமுள்ள கருப்புகளை என் நஞ்சான் குஞ்சான்களே நீள நீள நினைத்துப் பார்த்துக் கொள்ளட்டுமென்று அவர்களின் ஆலோசிப்பிலே—யோசனையிலே விகடன் விட்டுவிடுகிறேன்! ராம்! ராம்! சுபம்! சு! சுவாஹா!!

## நீடித்த விரோதத்தன்மையின் மௌடீகம்.

—oo✻oo—

பதிலுக்குப் பதில் விரோதத்தன்மை காட்டுவதில் விரோதமும் பகையுமே மிருதிப்படுகிறது. விரோதத் தன்மையை ஒருவர்மீது கொண்டுவிட்டு—'அவர்கள் தன்மீது விரோதமாய்' நிற்கின்றனர்—என்பது மௌடீகம். பிறர் மனத்தில் விரோதம் முற்றிப் பெருகுவதற்குத் தான் ஒரே பிடிவாதமாய்க் கொண்டுள்ள விரோதமே துணைக்காரணமாகிறது. தன்னிடம் விரோதம் காட்டுமிடத்தில் அன்பையுணர்த்தி, விரோதப்பட்டோரும் அன்பு மயமாய்த் திரும்பச்செய்யும் சக்தியை ஏற்பதற்கு அபாரமான ஞானமும் மனோபலமும் வேண்டும். இது இன்மையால் குடும்பம் என்றும் கலக ஸமுத்திரமே. அதிற் பயனென்னும்?



"ஒரு ரூபாய்க்கு மொத்தமாய் வாங்கினுல் பத்துபடி கொத்தமல்லி" என்று ஒருவர் கூற, அதற்கு விகடன் "வீட்டுச்செலவுகளை இன்னும்சுருக்கினுல் இதைவிட அதிக லாபம் காணலாம்" என்றும், "செலவுகளைக் குறைக்காது கொத்தமல்லி வாங்கி லாப மில்லை" என்றும் பதில் சொன்னுனும்!

ஃ

காமிக்குத் தடை ஏற்படுத்திய சாமியின் பயம் ருஷியாவில் தீர்ந்துவிடவே, இப்போது மாமியும் மருமகளும் கைகோர்த்துக்கொண்டு ரஸ்தாவில் வருவதற்குச் சுலபமாய் இருக்கிறதாம்!

ஃ

"வீட்டில் மணியடிக்கும் பெரிய கடியாரமொன்றை மாட்டிவிட்டால் அது அதிக சொத்திருக்கிறதென்ற ஊராரை மயக்க நல்ல வசதிப்படும்" என்று பேபே செட்டியார் கூறுகிருர்.

ஃ

"கடன் வைத்து இறந்துபோன தகப்பனும், விபசாரியாய் இருக்கும் தாயும், சொன்னபடி கேட்காமல் இஷ்டப்படி குடிசட்டியாய் நடப்பவளும், படிப்பில்லாத பிள்ளையும் நேர்ந்துவிட்டால் என்னுகும்" என்று ஒருவர் கேட்க, அதற்கு விகடன் "இவர்களைவிட வேறு சத்துருக்கள் உலகில் இல்லை" என்ருனும்!

ஃ

பிரயாணப்பட்டது சரி, வண்டியேறுகிறவரை அது நிச்சயமில்லையாம்!

ஃ

அகத்துக்கழகு—மனைவி
இகத்துக்கழகு—சுவிரக்கம்
உலகத்துக்கழகு—பேதமின்மை
ஊருக்கழகு—கோயில் குளம்
எருதுக்கழகு—கவடில்லாமை
கடைக்கழகு—பலசரக்கு
காப்புக்கழகு—கையில் அணிதல்
கிளிக்கழகு—கொஞ்சிப் பேசல்
குரலுக்கழகு—சங்கீதம்
கூரைக்கழகு—மண் சுவர்
கெம்புக்கழகு-பொன்னில் புதைத்தல்
சவத்துக்கழகு—தவிப்போர் இருத்தல்
சாவுக்கழகு—பத்துபேர் சேர்தல்
சிரசுக்கழகு—நீண்ட மயிர்
சீலத்திழகு—நெறி தவருமை
செக்குக்கழகு—எண்ணெய் பிழிதல்
சேலைக்கழகு—சாயம் போகாமை
சொத்துக்கழகு—சேர்த்துவைத்தல்
தனத்திற்கழகு—தான தருமம்
தானத்திற்கழகு-பாத்திரமறிந்திடுதல்
தினத்திற்கழகு-மப்பு மந்தாரமின்மை
துறவிக்கழகு—ஆசையை அகற்றல்
தூணுக்கழகு—வீட்டுக் கமைத்தல்
தென்னைக்கழகு—தேங்காய்க்குலை
தேருக்கழகு—சித்திர பொம்மைகள்
தைலத்திற்கழகு—பிணி போக்கல்
தொட்டிலுக்கழகு—இளங்குழந்தை
தோசைக்கழகு—கார சட்னி
நகைக்கழகு—தேகத்தி லணிதல்
நாவுக்கழகு—கசடறப் பேசல்
நிலத்திற்கழகு—செவ்வனே விளைதல்
நூலுக்கழகு—துணியாய் நெய்தல்
நோன்புக்கழகு—சோசையும் வடையும்

கடிகை விகடன்.

வேண்டியபோது வேண்டிய சௌகரியம் கண்டுகொள்ள ஒரு பெண்ணரசியின் துணை எல்லாக் காலங்களிலும் வேண்டியதுதானும்!

ஃ

எத்தனை படித்தும் அந்த மூந்திய பழக்கப்புத்தி விடுகிறதில்லையாம்!

---

"நான் மயங்கி விடுவேனென்று மெதுவாக எனது கற்பு நாடியைப் பரிசோதித்துப் பார்க்கிருயா ?. கொள்ளிக்கட்டையால் சுட்டுவிடுவேன்."




(முன் பக்கம் 90-லிருந்து)

## Friendship :—

## நட்பு.

524. Friendship is constant in all other things, save in the office and affairs of love.

SHAKESPEARE.

காதல் காரியங்களிலும் விஷயங்களிலும் தவிர மற்ற எல்லாவற்றிலும் நட்பு நிலைத்து நிற்கிறது.

ஷேக்ஸ்பியர்.

525. I count myself in nothing, else so happy, as in a soul remembering my good friends.

SHAKESPEARE.

என்னுடைய சிறந்த நண்பர்களை நினைத்துக்கொண்டிருக்கும் செய்கையொன்றைத் தவிர மற்றதில் நான் சந்தோஷம் உள்ளவனாகக் கருதவில்லை.

ஷேக்ஸ்பியர்.

526. The amity that wisdom knits not, folly may easily unite.

SHAKESPEARE.

அறிவு நட்பை ஒன்றுபடுத்தாது. மூடத்தனம் வெகு சீக்கிரத்தில் சிதைத்துவிடும்.

ஷேக்ஸ்பியர்.

527. I have not from your eyes that gentleness, and show of love, as I was wont to have: you bear too stubborn and too strange a hand, over your friendship that loves you.

SHAKESPEARE.

என்னிடத்தில் வழக்கமாக உள்ள சாதுவான தன்மையும், வெளித்தோற்றமான அன்பும் உன் கண்களில் காணப்படவில்லை. உன்னை நேசிக்கும் நண்பர்களிடத்தில் நீ வெடுவெடுப்பாயும், அன்னியனைப் போலவும் நடந்துகொள்ளுகிறாய்.

ஷேக்ஸ்பியர்.

528. True happiness consists not in the multitude of friends, but in their worth and choice.

BEN JONSON.

உண்மையான சந்தோஷம் பெருந்தொகையான நண்பர்களினால் இல்லை. ஆனால், அவர்களுடைய உத்தம அமிசத்திலும், குணத்திலும் பொருந்தி இருக்கிறது.

பேன் ஜான்ஸன்.

529. But a few friendships wear and let them to by nature and by fortune fit for thee.

MARTIAL.

சிநேகர்கள் கொஞ்சமாக இருந்தாலும் அவர்கள் இயற்கையிலும், பாக்கியத்திலும் உனக்குத் தகுதியானவர்களாக இருக்கட்டும்.

மார்ஷியல்.

530. Friendship's an abstract of love's noble flame, 'tis love refin'd and purged from all its dross, 'tis next to angel's love, if not the same, as strong in passion is, though not so gross.

CATHERINE PHILIPS.

---

ஒரு புகாரைச் சொன்னவர்கள் அதை ரூபிக்க முடியாவிட்டாலும் அது முற்றிலும் பொய்யாகிவிடாது. நெருப்பின்றி இந்தப் புகை கிளம்பியிராது.

நட்பு அன்பின் சிறந்த சத்துவப் பொருள். அது திருத்தம் பெற்ற அன்பு. தன்னுடைய எல்லா குற்றங்களினின்றும் நீங்கப்பட்டது. தேவதையின் அன்பேயாக இல்லாவிடினும் அது அதனுடைய அடுத்தபடியாகும்.

காதரயின் பிலிப்ஸ்.

531. Thick waters show no images of things; friends are each other's mirrors and should be clearer than crystal, or the mountain springs, and free from clouds, design or flattery.

CATHERINE PHILIPS.

தடிப்பான தண்ணீர் வஸ்துக்களின் பிரதிபிம்பத்தைக் காட்டாது. சிநேகிதர்கள்—ஒருவர் மற்றவருடைய கண்ணாடி போன்றவர்கள். பளிங்கு அல்லது மலையிலுள்ள ஊற்றுத் தண்ணீரை விட, களங்கம், நோக்கம், முகஸ்துதி முதலியவைகளினின்றும் நீங்கப்பெற்றுத் தெளிவாக இருக்க வேண்டும். காதரயின் பிலிப்ஸ்.

532. Such is the use and noble end of friendships to bear a part in every storm of fate and by dividing, make the lighter weight. HIGGONS.

விதியின் ஒவ்வொரு புயல் காற்றையும் பகிர்ந்து அனுபவித்து, பகிர்வதால் துன்பத்தைக் குறைப்பதே பெருந்தகையான சிநேகிதத்தின் சிறந்த முடிவாகும். ஹிக்கன்ஸ்.

533. Friendship's the privilege of private men; for wretched greatness knows. No blessing so substantial. N. TATE.

உண்மை நட்பு சாமானிய மனிதனுக்குள்ள சுதந்திரம். உயர்பதவியில் இருப்பவர்கள் அவ்விதமான சிறந்த பாக்கியத்தைக் காணமுடியாமல் வருந்துவார்கள். என். டேட்.

P. G. தலசேகரம்.

## சுவாமி நாராயணரின் மதம்.

சுமார் 170-வருஷங்கட்கு முன்பு குஜராத் பிராந்தியத்தில் "சுவாமி நாராயணன்" என்ற ஓர் பெரியவர் புதிதாக ஓர் மதம் ஸ்தாபித்துச் சிஷ்யர்களைச் சேர்த்து உபதேசித்து வந்தார். அவருக்கு சிஷ்யரான ஒவ்வொருவருக்கும் முதற்கடமையொன்று ஏற்பட்டது. அதாவது தானல்லாமல் வேறு ஆறு கொழுத்த சிஷ்யர்களை ஒவ்வொருவரும் தேடி சுவாமிகளிடம் சேர்ப்பிக்கவேண்டியதென்பதாம். இவ்விதமே, நமது அன்பிற்கினிய கையொப்ப நேயர்களும், தாங்கள் சேர்ந்ததுடன் போதுமென்றிராமல், ஆறோ, ஐந்தோ, நான்கோ புதிய சந்தாதாரர்களையும் அதேமுயற்சியாயிருந்து சேர்த்துக்கொடுத்து "அமிர்தகுணபோதினி"யை விருத்தி செய்யுமாறு மிகவும் வேண்டுகிறோம்.

# சிறுமணித்திரள்

(முன் பக்கம் 79-லிருந்து.)

662. ஒரு பாஷை அப்பாஷை வழங்குபவர்களின் குணத்தையும் முன்னேற்றத்தையும் காண்பிக்கும் சரியான பிரதிவிம்பமாகும்.

663. சில பானங்கள், வெறும் வயிற்றில் அழிவிற்கு வழி தேடுவது போல, சில எண்ணங்கள், வேலையற்றிருக்கும் மூளையில், நாசத்திற்கு வழி நாடுகின்றன.

664. இராப்போஜனமின்றியாயினும் படுக்கைக்குச் செல்லலாம். ஆனால், கடனுள்ளவனாகமட்டும் காலையில் எழவேண்டாம்.

665. கடன் பட்டவர்களைவிடக் கடன் கொடுத்தவர்களுக்கு ஞாபகம் அதிகம்.

666. கோப குணம், நிமிடத்திற்கு நிமிடம் அதிகரிக்கிறது. குறுகிய நாவு அடிக்கடி அசைவதால், வர வர, தக்க கூர்மையான ஆயுதமாகிறது.

667. அறிவின்மையை விடக் கவனமின்மையே அநேக நஷ்டங்களை உண்டுபண்ணுகிறது.

668. நேர்மையானவைகளைத் தானாகவே மனப்பூர்த்தியுடன் செய்வது சன்மார்க்கம்.

669. சுயநலத்தைக் கருதியவனும், பிறர்நலத்தைக் கருதாதவனும் மிருகத்தன்மையுடைய மனிதனாகவே கருதப்படுகிறான்.

670. மேகச்சாயை, துஷ்டனுடைய தயை, இளம்புல், யௌவனம், தனம், இவை நீடித்திரா.

671. அதிர்ஷ்டத்திற்குத் தாய் உழைப்பு. தரித்திரத்திற்குத் தாய் சோம்பல். சோம்பலானது விருத்தியென்னும் விருக்ஷத்திற்கு வேர்ப்புழு.

672. இளவயதில் செய்யும் பிரயாணம் கல்வியின் ஒரு பகுதி. முதுமையில் செய்யும் பிரயாணம் அநுபவம்.

673. நன்மை யடைந்தால் அது நம்முடைய முயற்சியின் பலனென்றும், தீமை யடைந்தால் அது நமக்குப் புறம்பான விதியின் பயனென்றும் நாம் கூறிக்கொள்வது சகஜமாய்விட்டது.

674. திருமகள்: உற்சாகமுள்ளவன்; சந்தோஷமுள்ளவன், தைரியசாலி, சூரன், களங்கமில்லாதவன், இவர்களை அன்புடன் ஆசீர்வதிக்கிறாள்.

675. மன அமைதியைத் தந்து இன்பம் பயப்பதும், சமயத்திற்கேற்ற உதவி அளிப்பதும், வாழ்க்கையின் நோக்கத்தை அளித்து மகிழ்வூட்டுவதும், மனோவிருத்திக்கு இன்றியமையாத காரணமாக விளங்குவதும், மரணத்தினால் பிரிக்க முடியாததும், அருமையும் பெருமையும் வாய்ந்த நூல்களைப் போன்றதும், நட்பு என்பது ஒன்றே. சோ. த. ஆநந்தன்.

---

ஒரு வீட்டில் ஒருவருக்குத் திடீர் என நோய் நேர்ந்தால் வீட்டுக்காரன் வருகிறவரை அருகிலிருந்து, தாங்களும் கூட இருந்தோமென்று அவனுக்குக் காட்டிக்கொண்டு கணக்கு ஒப்புவிப்பது சிலாது தந்திரம்.

# சுயமரியாதைத் திருமணத்தில் எது குறைவு?

சுயமரியாதைத் திருமணமென்று சிலகாலமாக நடந்துகொண்டு வருவதை நேயர்கள் அறிந்திருக்கலாம். இதில் எந்தப்பாகம் குறைவுபட்டிருக்கிறதென்பதைக் கவனித்தால், ஒன்றும் புலப்படவில்லை. மாப்பிள்ளையோ, மாப்பிள்ளை வீட்டுக்காரரோ, பெண்ணைப் பார்த்து வருகிறார்கள். பிறகு பெண் வீட்டுக்காரரும் மாப்பிள்ளையைப் பார்க்க வருகிறார்கள். இவை திருப்திகரமாய் முடிவு பெற்றவுடன் ஒரு நாளைப் பார்த்து திருமண நாள் என்று குறிப்பிட்டுக் கொள்கிறார்கள். அந்தத் திருமணத்திற்குப் பத்திரிகை அச்சடிக்கப்படுகிறது; சினேகிதர்கட்கும் வெளியூர்கட்கும் வழங்கப்படுகிறது. அந்தப் பத்திரிகையில் குறிப்பிட்ட நேரத்தில் சகல பந்துக்களும், சினேகிதர்களும் கூடுகிறார்கள். கல்யாணப்பந்தலும் போடப்பட்டே நடக்கிறது. இந்தப் பந்தலுக்கு இந்தக் கல்யாணத்தைத் தலைமை வகித்து நடத்தவேண்டுமென்ற கருத்துடன் முன்னமேயே கேட்டு ஒப்புக்கொள்ளப்பட்ட ஒருவரை ஆரவாரத்துடன் வரவேற்கப்படுகிறது. (இவர்தான் சுயமரியாதைப் புரோகிதர்.) இவர் பந்தலுக்கு விஜயஞ் செய்தவுடனே சரியான ஆசனமளிக்கப்படுகிறது. மாப்பிள்ளையும் பெண்ணும் எப்போதும்போல அலங்கரித்துக்கொள்கிறார்கள்; அவர்களுக்கென்று குறிப்பிட்ட ஆசனத்திலமருகிறார்கள். உடனே தலைவர் என்ற பெயர் பெற்றவர் இரண்டு கையாலும் மாலையைத் தூக்கிக் கொள்கிறார்; மேலே பார்க்கிறார், கீழே பார்க்கிறார்; சபையைப் பார்க்கிறார்; ஏதோ தன்னால் சொல்லக்கூடிய வாழ்த்துச் சொற்களைச் சொல்கிறார். இருவருக்கும் மாலை அணிகிறார்; மாங்கல்யமும் அணியப்படுகிறது. சந்தன தாம்பூலங்களும் புஷ்ப ஹாரங்களும் வழங்கப்படுகிறது. விளக்கும் வைத்துக்கொள்கிறார்கள். வந்திருந்தவர்களும் ஒருவர் பாக்கியில்லாமல் சாப்பிட்டுக்கொள்கிறார்கள். இதில் முன் நடத்திவந்த திருமணத்திற்கும் இந்தச் சுயமரியாதைத் திருமணத்திற்கும் எது குறைவு என்று பார்த்தால், பார்ப்பானென்ற ஒரு சமூகத்தான் மட்டும் இந்தத் திருமணப்பந்தலில் புரோகிதம் செய்வதில்லை. ஆனால், அதற்குப் பதிலாக, தலைவர் என்று பட்டம் பெற்றுக்கொள்பவர் சகலமும், பிரதிநிதியாய் நின்று நடத்திவிடுகிறார். ஆகையால், சுயமரியாதைக் கொள்கைக்காரர்கள் உலகத்திற்கு என்ன நன்மை இந்தத் திருமண விஷயமாய் செய்திருக்கிறார்களென்று கவனித்தால் பிராமணன் வேண்டாமென்பதே நோக்கம். இந்தப் பிராமணன் ஒரு கல்யாணத்திற்கு வந்தால் ஏறக்குறைய 5 வெள்ளி தெட்சணை போதும். தலைவரென்ற புரோகிதர் வந்துவிட்டால் அவருக்கு மாலையும் செண்டும், 7 வெள்ளியாகிறது. பிறகு வந்தனோபசாரப் பத்திரம், வரவேற்புச் செலவு, மோட்டார் செலவு, அச்சாபீஸ்செலவு, காப்பிக்குடிச் செலவு இவைகளெல்லாம் எத்தனை 5 வெள்ளியாகிறதென்பதைக் கவனிப்பதில்லை. இன்னமும் நடக்க நடக்கப் பார்ப்போம்.

கனகம்.

(இந்திய மித்திரன், ஏப்போ.)

# ஆசிரியருக்குக் கடிதங்கள்.

## மால்ட் வினிகர் எனும் சீர்மைக்காடி.

### 1. தேள் கடி.



தேளால் கொட்டப்பட்டு அடையும் அவஸ்தையோ சொல்லும் தரத்ததன்று. அநேகர் அதன் உபாதி பொறுக்கலாற்றாது மூர்ச்சித்துப் போவதும் தவிர, மரணசங்கடத்துக்கும் ஆளாகின்றனர். தேள்களில் அநேகவிதம் உண்டு. அவற்றுள் கருந்தேளின் கொட்டுதல் மிக விஷமுடையதென்றும், அக்கொட்டுதலினின்றும் பிழைத்தவர்கள் வெகு சிலர் என்றும் சொல்வர். இதற்குச் சரியான சிகிச்சை 'மால்ட் வினிகர்' என்று சொல்லப்படும் சீர்மைக் காடியில் சிறிது எடுத்துக் கொட்டின இடத்தில் நன்றாய்த் தேய்த்தலேயாம். அப்படித் தேய்ப்பதனாலே முதலில் விஷம் ஏறுகிறது நின்று விடுகிறது. இரண்டாவது எரிச்சல் அமைதியாகிறது. மூன்றாவதும் கடைசியுமாகக் கொட்டின இடத்தில் நோய் நின்று முற்றும் சுகத்தை யளிக்கிறது. இந்த சீர்மைக் காடியின் சிகிச்சையினை மேல் நவின்ற தேள் கொட்டலுக்கு மாத்திரமேயன்றி, மற்றுமுள்ள எவ்வித விஷக் கடிகளுக்கும் மேல் உபயோகம் பண்ணலாம். இந்த 'மால்ட் வினிகர்' என்ற சீர்மைக்காடியின் விலை பட்டணக் கடைகளில் புட்டியொன்றுக்கு அணா எட்டாக விற்கப்படுகிறது. ஒரு புட்டிக் காடியானது சுமார் இருநூறு பேர்களைச் சொஸ்தப்படுத்தக் கூடியதாயிருக்கும்.

தேள் கொட்டினவர்களுக்கு முதலில் முகத்தில் சிறிது ஜலம் அடித்து ஆயாசம் நீங்கும்பொருட்டு விசிறியினால் விசிறிக்கொண்டேயிருக்க வேண்டும். இரண்டாவது, முன் சொன்ன 'மால்ட் வினிகர்' என்ற சீர்மைக்காடியைத் தேய்த்துக் கொண்டே யிருக்க வேண்டியது. மூன்றாவது சோர்ந்து கிடக்கும் கொட்டுண்டவர்களுக்குக் களை தெளிந்து ஆன்மபலம் வருவதற்காகக் கொஞ்சம் பிராந்தி, பலம் நோக்கி உள்ளுக்குக் கொடுக்க வேண்டும். நாம் சொல்லி வந்தவரை உண்மை வைத்து நாம் சொல்லிய மார்க்கமாகச் சிகிச்சை செய்தால் அவசியம் குணமாகும்.

ஒரு வைத்தியர்.

### 2. பாம்புக் கடி.

மிஸ்டர் வி. ஜே. கிரீன் கிராஸ் என்பவர் பாம்புக் கடிக்கு மருந்து என்கிற விஷயத்தைப்பற்றி எழுதியிருக்கிறார். அவரது முறையாவது :— கடிவாய்க்கு மேல் ஒரு கட்டு கட்ட வேண்டும். கடிவாயில் முக்கால் அரை அங்குலம் சதையை நறுக்கி இரத்தத்தைப் பிழிந்து, நறுக்கிய இடத்தில் மருந்து போடவேண்டும்.

இவர் இம்மருந்தை 20-பேர்களுக்கு உபயோகித்ததில் எல்லோரும் சுக மடைந்தார்கள்.

இந்த மருந்து காடிதான். ஒரு பாட்டில் காடியை 144 பேர்களுக்கு உபயோகிக்கலாம். ஒரு பாட்டில் காடியின் விலை அணா 8. இம்மருந்து தேள்கடிக்கும் வெகு அநுகூலமானது. ஒரு சர்க்கார் உத்தியோகஸ்தர் இம்மருந்தினால் சொஸ்தமானவர்களில் அநேகரைத் தமக்குத் தெரியும் என்கிறார்.

R. R.

## வறுமையின் தவிப்பு! (டைரி.)

(ஒரு பி. ஏ. பட்டதாரியின் கூற்று)

I

— 22-மார்ச்சு —

நேற்றிரவு அரைவயிறு பட்டினி! கடன் தரும் கடை மூடியிருந்தது. நான் வயிற்றில் அடித்துக்கொண்டு, என் பெரிய படிப்பை நினைத்து ஆத்திரம் பொங்கினேன்.

இன்று செலவுக்கு மிக்க கலக்கம். கையிலிருந்த ஒரு ரூபாய்க்கு அரிசி வாங்கிவிட்டேன். தாயாரைக் கேட்க, "ஒரு காசுகூட வாங்கித்தர இயலா"தென்று சொல்லி விட்டார். பின்பு மனைவி காலணாவாகச் சேர்த்துவைத்த உண்டியை உடைத்து ஒரு ரூபாய்த் துட்டுகளைக் கைக் கொண்டேன். காலையில் தோசைக்காகத் தினமும் மாவு அரைத்துக் கையெல்லாம் நோகிறது! இதுவா என் தலை விதி? எங்கும் வேலை கிடைக்கவில்லை. வேலையிலுள்ளோர் வேலை யில்லாதவர்களின் பரிதாபத்தைக் கவனிப்பதில்லை!

பலமுறை என் வீட்டில் புசித்த உறவின ரொருவருக் கும், நண்பனுக்கும் ஏதாவது ரூபாய் அனுப்புமாறு வேண்டி அவசரக் கார்டு எழுதினேன். அனுப்புவரோ யாதோ!

இன்று கோயிலுக்குச் சென்று கடவுளின் முன்பு புலம்பினேன். ஆ! கொடிய வறுமை! 28-வயதாகியும் இன்னும் ஒரு நிச்சய ஜீவனார்த்தமில்லை. மனைவியின் நகை கள் யாவும் கடனில் உள்ளன. என் செய்வேன் தெய்வமே!

II

— 25-மார்ச்சு —

இன்று மனச்சோர்வுடன் கடையில் கடனுக்குச் சாமான்களை வாங்கவெண்ணி, கடவுளைத் தியானித்தபடி கடைவீதிக்குச் சென்றேன். தபாற்காரர் எதிர்ப்பட்டார். உறவினரின் கடிதமேயில்லை. பணம் என்று கேட்கப்புகின் எவரும் பதுங்கி விடுவது இயல்பு. பெரிய ஏமாற்றம்! நண்பன் ஒரு ரிஜிஸ்தர் கடிதம் அனுப்பினான். பத்து ரூபா நோட்டு ஒன்று அதில் இருந்தது. மனக்கவலை நீங்கினேன். ஒரு வீட்டுக் கிரயபத்திரம் எழுதி முன்பு நான் தந்ததற்கு ஒருவர் என்னைத் தேடிவந்து ஐந்து ரூபா தந்தார். ஒரு காசு மின்றிக் கடைவீதிக்குச் சென்ற நிலையில் 15-ரூபாய் பெற்று உள்ளங் குளிர்ந்தேன். கவலையற்று இல்லமுற் றேன். இனி என் பிந்தியஜீவியம் எப்படியோ? ஈசன் துணை.



# பிரபஞ்ச தரிசனம்





ஆதி காலத்து மகரிஷிகள், தபோதனர், எதிகள், பூஸுரர்கள் வாஸஞ் செய்த இடங்களுக்குப் புண்ய ஸ்தலங்களென்று கூறுவார்கள். ஒவ்வொரு ஸ்தலத்துக்கும் மகிமை விளங்குகிறது. நதிகளுக்குள்ள மகிமையும், க்ஷேத்திரங்களுக்குள்ள பெருமையும், கிரிகளுக்குள்ள சிரேஷ்டத்துவமும் காரணமில்லாமல் பிறந்திரா.

கோரி பிதனூர் :—இதனருகே விதுராச்வத்தமென்கிற ஒரு அரச மரமிருக்கிறது. விதுரன் அந்த மரத்தின் கீழ் தபஸ் செய்ததாகக் கூறுகின்றனர். விதுரனுடைய காலத்திலிருந்து இன்றுவரை அந்த மரம் யாதொரு கெடுதியுமின்றிப் பிழைத்திருக்கிறது. தற்போது அதை ஜனங்கள் பூசித்து வருகின்றனர்.

பசுவன்குடி :—இது நந்தியின் கோவில். கெம்பே கௌடன் என்ற சிவபக்தன் நந்தியின் கோவிலுக்கு முக்கால் மைல் தூரத்தில் ஒரு பாறையைக் குடைந்து சிவலிங்கப் பிரதிஷ்டை செய்தான். குகை மாதிரி பாறையிருப்பதால் குக கங்காதரேசுவரர் என்று நாம மிடப்பட்டது.

திருமகூட்லு நாசீபுரம் :—இங்கு காவிரி, கபிலா, குண்டுலூ என்று பெயருள்ள நதிகள் கூடுவதால் திருமகூட்லு என்ற பெயர் வந்தது. இங்கே ஒரு சிவலிங்கமுண்டு. விஷ்ணுமூர்த்தியும் உண்டு. லக்ஷ்மீ நரஸிம்ம ஸ்வாமி என்ற நாமம் வழங்குகின்றது. ஸ்வாமியின் கழுத்தில் தீர்த்தம் வடிந்துகொண்டேயிருக்கிறது. அந்த ஜலமே பக்தாதிகளுக்கு தீர்த்தமாய்க் கொடுக்கப்படுகிறது. அரை நிமிஷம் கூட ஓயாமல் ஜலம் பொசிந்துகொண்டே இருக்கிறது. அநேகர் பரீக்ஷித்தார்கள். பகவத் மஹிமையென்று அபசாரம் கூறி வாயை மூடிக்கொண்டனர்.

சுஞ்சினகட்டை :—இதற்கு அருகே ஸ்ரீராமர் வஸித்தாராம். ஸீதாதேவி ஸ்நானம் செய்கையில் ஜலம் ஓசை கேட்டது. ஆச்ரமத்திலிருந்த ஸ்ரீராமர் ஓசை போதுமென்றாராம். இப்போதும் ஆசிரம வாசலிலிருந்தால் ஓசை கேட்கிறது, உள்ளே சென்றால் சப்தமே யில்லை. நதியில் மஞ்சளும் சீயக்காயும் கலந்து வருகிறது. காட்டில் ஒரு நாளைப் போல் நித்யம் யார் மஞ்சளையும் சீயக்காயையும் போடுவார்கள்? தர்க்கப் பிரியர்கள் கூற வேண்டும்.

உத்தனஹள்ளி :—இதில் ஜ்வாலாமுகியெனும் பெயருள்ள ஒரு காளியிருக்கிறாள். மகிஷாஸுர மர்த்தன

---

ஆரவார வாழ்வுக்கு அது என்றைக்கும் நிலைக்கும் என்ற உறுதி ஏது? அதிர்ஷ்டதிசை சிலருக்குத் திடீரெனத் தோன்றி திடீரெனப் போய்விடுகின்றது. அதற்குள்ளாக அடுத்த கடைக்காரனைப் பழித்தல் வேறே!

காலத்தில் இந்தத் தேவியின் ரூபம் தோன்றிற்றும். எதிரில் யார் தென்பட்டாலும் தகிக்கப்பட்டனர். இப்போதும் அந்தக் கோயில் முள்ளாலும் கல்லாலும் அடைக்கப்பட்டிருக்கிறது. மனித ஸஞ்சார மில்லை. பூஜாரிகள் கிடையார். புலிகளும் துஷ்ட மிருகங்களும் ஸ்வேச்சையாய்த் திரிகின்றன. பரீக்ஷை செய்யப் பிரயாஸத்துடன் சென்றவர்களெல்லாம் ரக்த வாந்தியாலும் பேதியாலும் மாண்டனர். ஜ்வாலாமுகி என்றால் எல்லோரும் நடுங்குவார்கள்.

**நீலகிரி** :—இதற்கருகே பஞ்சபாண்டவர்கள் வசித்தார்களென்று பிரஸ்தாபம். ஒரு கோட்டையும் சுற்றுப்புறம் மதில் சுவர்களு முள. கோட்டைக்குள் சில கட்டிடங்கள் காணப்படுகின்றன. பவானி நதி உதகமண்டலத்திற்குச் சிறிது தூரத்தில் உற்பத்தியாகிறது. பவனீசுவரரென்று சிறிய தேவாலயமிருக்கிறது.

**பரசுராம க்ஷேத்திரம்** :—ரமணீயமான பிரதேசம். ஆறு ஓடுகிறது. அடர்ந்த சோலை. ஜனசந்தடி கிடையாது. குளிர்ச்சியான இடம். அரசமரமும் அதன் கட்டிடமும் மனிதர்களைத் தங்களிடத்தில் உட்காரச் செய்யும் ஸாமர்த்தியமுள்ளவை. பரசுராமர் வேலையெல்லாம் முடிந்து மனஸ்சாந்தியடைந்த இடம் என்கிறார்கள். அந்த வார்த்தையை உண்மையாக்க இப்போதும் அவ்விதமே சாந்தஸ்தலமாயிருக்கிறது.


மிக்க அழகுடன் விளங்கும் சிலரது காந்தி மயமான வதனம் சிற்சில தருணங்களில் தேஜஸ் இழந்து அமங்களத் தோற்றமாய் இருள் அடைந்துகாண்கின்றது. இது ஏனோ? அது வீட்டுக் கலகத்தால், அடங்கா மனைவியால், நொந்துபட்ட புண்ணால், ரோகத்தால், வேலை கிடைக்காமையால், கடனால், இன்னும் பல பலவற்றாலா? ஒளி—களங்கமற்ற உள்ளத்தின் குறிப்பாகும். சிறிது விசனமோ பிணியோ நேரின் அந்த ஒளி மறைந்துவிடுகிறது.

## வீட்டுக்குள் வருகிற தலையாட்டித் தெய்வங்கள் !

இரண்டு இடத்திலும் தலையாட்டி அவரவர்களுக்குத் த்குந்தபடி பேசுவோர், எந்தப் பக்கம் நியாயமிருக்கிறதென்பதைக் கவனியார். எல்லாருக்கும் நல்லவராக ஒதுங்கி எதிலும் பட்டுக்கொள்ளாமல் விலகுவதிலேயே அவர்களின் முழுக்கவனம் இருந்துகொண்டிருக்கும். இவர்களிடம் நம் குறைகளைச் சொல்லி யழுது முட்டிக்கொள்வதிலும் ஒரு குட்டிச்சுவரினிடத்துச் சொல்லி முட்டிக்கொள்ளலாமே.

# பங்கஜம்



சென்னை பாரிஜாத விலாஸத்தில் அதி சுந்தர மனமோகன் பங்கஜவல்லிக்கு மாத்திரம் சிறிது வருத்தம். பதி பக்தி நிறைந்த பாவையவள். குணமும், குணாலனும் நிறைந்த புனிதவல்லி யாவள். அவளுக்குக் கல்யாணம் ஆகி இற்றைக்கு சற்றேறக்குறைய பத்து ஆண்டுகள் கழிந்தும், நகையோ நட்டோ அவள் கணவன் செய்துபோடவில்லை. இரண்டு வருடங்களுக்கு முன் அவள் அணிந்திருந்த பொன் வளையல்களுள் ஒன்று உடைந்துவிட்டது. அதைக் கூட அவள் கணவன் சீர்படுத்திப் போடவில்லை. நம் கதையின் ஆரம்ப தினத்தன்று அவ்வளையலை அழித்து வேறுவிதமாகச் செய்துபோடத் தன் கணவனை வேண்டினுள். அவனே கையில் பணமில்லையென்றும், அடுத்த மாதம் சம்பளம் வந்ததும் அவசியம் செய்து போடுவதாகவும் வாக்களித்தான். எத்தனையோ கெடுவில் இது ஒன்று. என் செய்வது? கையில் பணமில்லாக் காலத்து இப்படித் தானே கெடுவும் கெடுவதுண்டு. இதைக் கேட்டதும் பங்கஜத்திற்கு மனத்திற்குள்ளாகவே சிறிது வருத்தம் உண்டாயிற்று. எவ்வளவுதான் அதை அவள் மறைக்க முயன்றபோதிலும், அவள் முகம் அவளுடைய மன வருத்தத்தைச் சற்றே எடுத்துக் காட்டிவிட்டது.

ஃ

பங்கஜத்தின் கணவன்பெயர் சாமிநாதன். பங்கஜம் அவனை நகையைப் பற்றி கேட்டதுமுதல், 'அவள் கேட்டதைச் செய்து போடவில்லையே' என்று ஏங்கலானுன். அவளை மணந்ததுமுதல் அவனைக் கேட்டுக்கொண்டது அது ஒன்றே. அதுவும் வளையல் உடைந்திராவிடில் அதையும் கேட்டிருக்க மாட்டாள். பங்கஜத்தின் குணத்தை நன்ருக உணர்ந்தவனுதலால், 'அவளுடைய வேண்டுகோளை எப்படியாவது பூர்த்திசெய்து கொடுக்கவேண்டும்' என்று தீர்மானித்துக்கொண்டான்.

ஃ

அன்று ஆபீசுக்குப் போனதில், பங்கஜத்தின் வேண்டுகோளே சாமிநாதன் மனதில் குடிகொண்டு வாதிக்கத் தலைப்பட்டது. 'எப்போது மணி ஐந்து ஆகும்' என்று எதிர்பார்த்தபடியே இருந்தான். அந்நேரமும் வந்து சேர, வேலையை ஒருவாறு முடித்துவிட்டு, வீடுநோக்கிப் புறப்படாமல், வேறு வழிகளில் சென்று மூர்மார்க்கட்டண்டை வந்தான். அக்கட்டிடத்தைப் பார்த்ததும் திடீரென்று ஏதோ எண்ணம் உண்டானது போல் அவன் சற்று உற்று நோக்கியவாறே நின்று, தன் கை கெடி

---

5-ல் 4-பேர்கள் அழிவதற்குக் காரணம் அசிரத்தையே. முதுகிலுள்ள மூட்டெலும்பு நெக்கு விடும்படி கூலிக்கு மூட்டை சுமந்தும், தவிடு விற்றும், பொதி எருது ஓட்டியும் தரித்திரத்தில் மிகுபட்டோர் தனவான்களானது எப்படி? சிரத்தையால்தான்; முயற்சியால்தான்; தன் ஓயா உழைப்பால்தான்.

யாரத்தைப் பார்த்தான். உடனே புன்னகை கொண்டான். அக்கெடியாரம் சென்ற வருடம் ஒரு வியாசம் எழுதியதற்குக் கிடைத்த பரிசு. சுமார் ரூ. 80-க்குத் தாளும். வெகு உற்சாகத்துடனே அக்கட்டிடத்துள் நுழைந்து தன் கடியாரத்தை விற்று ரூ. 60 பெற்றான். முன்னையிலும் சந்தோஷமும், உற்சாகமும் பலப்பட்டது. வெகு உற்சாகத்துடனே நகைக் கடைக்குச் சென்று நூதன பொன் வளையல் ஜதையொன்று வாங்கிக் கொண்டு வீடு திரும்பினான்.

ஃ

வீடு வந்ததும் ஒன்றும் சொல்லவில்லை. ஆனால், பங்கஜத்திற்கோ காலையில் இருந்த முகவாட்டம்போய், புன்னகை முகத்தில் தவழ்ந்தது. வெகு அன்பாகப் பணிவிடைகள் செய்தாள். இரவு சாப்பாடும் ஆயிற்று. சாமிநாதன் படுக்கைக்குப் போனான். பங்கஜம் வெகு விரைவில் தன்வேலைகளை முடித்துக் கொண்டு தாம்பூலத் தட்டைக் கையில் ஏந்தி, புன்னகை தவழ்ந்த முகத்தினளாய், ஓர் தேவ மாதுபோல் சாமிநாதனிருந்த படுக்கையறையுள் புகுந்தாள். பங்கஜம் பணிவுடன் வெற்றிலை மடித்துத்தர, சாமிநாதன் அதை ஆனந்தமாய்வாங்கி வாயில் போட்டு மென்றவாறு உல்லாசமாகப் பேசலானான். வெற்றிலை போட்டானதும் பங்கஜம் தன் மடியிலிருந்து ஏதோ ஒரு பொட்டணத்தை எடுத்து, தெரியாதவாறு கையில் பிடித்துக் கொண்டு, "நாதா! தங்களுக்கு அடியாள் ஒன்று தரப்போகிறேன். அது வெகு உபயோகமுள்ள வஸ்து. அதைப் பெற்றுக்கொண்டு எனக்கு என்ன தருவீர்கள்?" என்று வினவினாள்.

சாமிநாதன்:—"பெண்மணியே! என் கோகிலமே! நீ எதற்காக அதிகமாக விரும்பியிருப்பாயோ அதை நான் உனக்குப் பரிசாகத் தருகிறேன். அதற்குப் பதிலாக நீ என்ன கொடுப்பாய்"?

பங்கஜம்:—"கருணைத் துரையே! என் நாதா! என்னையே உங்கட்குக் கொடுத்துவிட்ட நான் புதிதாகஎன்ன தரப்போகிறேன்! என்றும் பணிவிடைக்காரியா யிருந்து தங்களின் பாத பத்மங்களைப் பூசித்து ஊழியம் செய்கிறேன். அதுதான் என்னால் முடியக் கூடியது. இன்னும் அடியாள் உள்ளத்தில் உண்டான மனப்பூர்வமான அன்பையும் உங்கட்கு ஸமர்ப்பிக்கின்றேன்"

என்று சொல்லியவாறு தன் கையில் வைத்திருந்த பொட்டணத்தைப் பங்கஜம் நீட்ட, அதை வாங்கியவாறே சாமிநாதன் தன் ஜேபியிலிருந்து வேறொரு பொட்டணம் எடுத்து அவள் கையில் நீட்டினான். இருவரும் அவரவர்களின் பொட்டணத்தைப் பிரித்தார்கள். அப்படியே ஸ்தம்பித்து விட்டார்கள். இருவரும் மௌனம் கொண்டனர். ஃ

சாமிநாதன் பங்கஜத்தைப் பார்த்து, "பெண்ணே! நான் மூர்மார்க்கெட்டில் விற்றுவிட்ட கடியாரம் உன் கைக்கு எப்படி வந்தது?" என்று ஆவலோடும் கேட்டான்.

அதேசமயம், "ஒடிந்த வளையல் பெட்டியிலிருக்க, அதைத் தட்டானிடம் கொடுத்துச் செய்வதற்குள் இப்புது பொன்வளையல் உங்கட்கு ஏது?" என்று மற்றொரு கேள்வியைப் பங்கஜம் கேட்டாள்.

---

அலுமினிய பாத்திரத்தில் மயில்துத்தம் கலந்த மாவுப்பசையை வைப்பின், ஒரு மாதத்திற்குள் பாத்திரத்தின் அடிப்பாகம் தூள் தூளாய் விடுகிறது.

"பெண்ணே! உன் சிறு ஆசையைத் திருப்திசெய்வதற்காக மூர்மார் கெட்டில் என் அழகிய கடியாரத்தை விற்று இதை வாங்கினேன். உன் உள்ளம் குளிர்ந்ததோ?" என்றான்.

அதற்குப் பங்கஜமும், "எனக்காக இழந்துவிட்ட அருமைக் கடியாரத்தை மறுபடி கண்டதும் தங்கள் உள்ளம் குளிர்ந்ததோ?" என்றாள்.

ஃ

பின் பங்கஜம் கடியாரம் தன்னிடம் வந்த வரலாறு கூறினாள். நாதா! இன்று பகலில் என் தந்தை ஊரிலிருந்து வந்தார். வேடிக்கையாக மூர்மார்க்கட்டுக்கு என்னையும் அழைத்துச்சென்றார். அந்தச் சமயம் தாங்கள் கடியாரத்தை விற்றுக் கொண்டிருப்பதைத் தூரத்தில் கண்டேன். அதை என் தந்தைக்குத் தெரிவித்து, "என்னகஷ்டமோ, யாருக்குக்கடன் தரவேண்டுமோ, பாவம்! தன் அருமையான கடியாரத்தை உங்கள் மாப்பிள்ளை விற்கிறார். இன்று காலையிலும் நான் புத்தியில்லாமல் ஒரு சிறு நகைக்காக அவரைக் கோபித்துக் கொண்டேன். அதனால் எவ்வளவு வாதனைப் பட்டாரோ?" என்று கண்ணீருடன் கூறினேன். உடனே என் தந்தை மற்றொருவரைக் கொண்டு அக் கடியாரத்தை வாங்கி என்னிடம் கொடுத்து, "இனி நகைக்கு ஒரு தொந்தரவும் செய்யாதே, எப்படியாவது மாப்பிள்ளையின் மனதைச் சந்தோஷமாகவும் தைரியமாகவும் இருக்கவை; நான் உனக்கு வேண்டிய நகை செய்து தருகிறேன்" என்றார். இதுதான் நடந்த விஷயம். தகப்பனார் தன் நண்பரின் வீட்டிற்குச் சென்றிருக்கிறார். நாளை காலையில் இங்கு வருவார்" என்றாள்.

"அப்படியா! என் கண்ணே!" என்று சாமிநாதன் சொல்லி பங்கஜத்தை வாரியெடுத்து அணைத்துக் கொண்டு முத்தன்னமுத்தம்தந்தான். பின் இதழ் பொருந்தி உயிர்கலந்து மகிழ்ந்தனர். இவ்வாறு காதவிருவர் கருத்து ஒக்க ஆதாவுபட்டதே இன்பம்.

P. G. குலசேகரன்.

## ஜெயில் புசிப்பின் கஷ்டம்.

காலை 7-30 மணிக்குத் தினந்தோறும் அரிசிக் கஞ்சி கொடுப்பது வழக்கமாம். அதில் எலிப்புழுக்கைகளும், மற்றும் பல சொல்ல வொண்ணாத ஈ, கொசு முதலியவைகளும் தான் அதிகமாய்க் காணப்படுமாம். அதைப் புசித்துவிட்டு வேலைக்குப் போய்விடவேண்டுமாம். சாப்பாடு பகல் 12-30-மணிக்குக் கொடுப்பார்கள். அச்சாப்பாடானது கல்லும் மண்ணும் கலந்ததா யிருக்குமாம். பற்களெல்லாம் உடைந்து போகும்வண்ணம் கற்கள் காணப்படுமாம். முள்ளங்கியின் இலையும் கீரைத்தண்டின் இலையும் போட்டு பருப்போடு வேகவைத்து உப்பு முதலியவைகூட இல்லாமல் குழம்பு என்று சொல்லித் தண்ணீரைப்போலக் கொடுப்பார்களாம். அதை உண்பதே மிக்க கடினம். வேறு விதியுமில்லை.

# பதில் தந்து பகையாவது.



ஒருவர் எழுதிய கடிதம் நமது கருத்துக்கோ பிரியத்துக்கோ வேறு பட்டிருந்தால், அந்த அபிப்பிராய பேதத்தைத் தெரிவித்துப் பதில் வரைவதிலும் கடிதமே தராதிருப்பது மேல். பதில் தரும் கடிதம் பிறர் மனம் நோகும்படியோ, அவரது கல்வியையோ, அபிப்பிராயத்தையோ, தாழ்த்திக் கூறியதாகவோ படலாம்; கேவலப்படுத்திவிட்டதாகவும் எண்ணலாம்; 'சற்றேனும் மதிக்காமல் இப்படிப் பதில் தந்து வீசி எறிந்தானே' என்று எரிச்சலும் கொள்ளலாம்; பகை வருத்தமும் வரலாம். இவ்வளவுக்கும் பதில் தராதிருந்துவிட்டால் எந்தத் தொல்லையு மில்லை.

'என்னவோ பதில் வரவில்லை' என்றும், 'அவர் எந்தக் கடிதத்திற்கும் உடனுக்குடன் சீக்கிரம் பதில் தருவதில்லை' என்றும் நினைத்துக்கொள்ளும்படியாகி அவ்வளவுடன் அவ்விஷயம் தீர்ந்துவிடும். இதில் எவ்வித மனஸ்தாபமும் இல்லை. சந்தித்த காலத்தில்கூட—'எப்படியோ பதில் எழுதத் தவறிவிட்டது' — என்று சாதித்து சமாளித்துவிடலாம்.

இவ்விதமின்றி, பதில் தருவதில் நமது எழுத்து காரமாகவோ, படிப்பவர் மனதிற்குப் பிடிக்காமலோ இருந்தால், அவர் ஆத்திரத்துடன் நம்மைத் தூற்றிப் பதிலுக்குப் பதில் எழுதத் தொடங்கிவிடுகிறார். இது வீணே பதில் தந்து பகையாகும் சங்கதி. அதைவிட, நமது அபிப்பிராயத்தையே அந்த மனிதர் அறிய முடியாமற் போய்விடும்படி செய்வது எந்தச் சச்சரவுக்கும் மனஸ்தாபத்திற்கும் இடமில்லாதவிதமாய்ச் சமாதானமாக அமையும். நாமும் நல்லவர்களென்ற பெயரைப் பெறலாம்.

பதில் தரக்கூடிய இடங்கள் நமது அதிகாரத்துக்கும், புத்திபோதனைகட்கும் உட்படக்கூடியவர்களிடம் மட்டும்தான். அவர்கள் கோபித்தாலும் நாம் கண்டித்துத் திருத்தவேண்டியது நமது கடமை. நாம் வலியச் சென்று நன்மைக்குத்தானே சொன்னேன்—என்று சாந்தப்படுத்தினால், அவர்களும் நம்சொல்லைப் பின்பற்றித் தங்களைத் திருத்திக்கொண்டு நம்மையும் உயர்த்துவர். இவ்வித இடங்கள் தவிர, மற்ற இடங்கட்கும், நாம் பணிந்து நடக்கும் பெரிய இடங்கட்கும் அவர்களின் கருத்துக்கு மாறானவற்றைத் தெரிவியாதிருப்பதே சமாதான மார்க்கமாம்.

பதில் தராதிருந்துவிடுவது சில கபடஸ்தர்களின் தந்திரம். எதிலும் பட்டுக்கொள்ளாமல் நிற்பவர்களுடையவும் ஒரு சாதுர்யம். தன்னை உதவி கோருகிறவனுக்குக் கடிதம் எழுதாதிருந்துவிடுவது சிலாது வழக்கம். எங்கே கடிதம் எழுதினால் ஒட்டிக் கொண்டுவிடுகிறானோ என்ற யோசிப்பாலும் கடிதம் எழுதாமை யுண்டு. தான் ஊரில் இல்லை யென்று காண்பித்துக் கொள்வதன்பொருட்டும் சில

---

சில குடும்பமாதர்கள் தூர்த்தஸ்திரீகளுடன் நெருங்கிய பழக்கம் கொண்டு குல ஸ்திரீகளிடம் பகைமை பாராட்டுகின்றனர். காக்கை யுகக்கும் பிணம். அவர்களை மணந்த ஆடவரின் சங்கதியோ அதுவும் விநோதமே!

யுக்திசாலிகள் கடிதம்எழுதுவதில்லை. தனக்குக் கைமாற்ருகக் கடன் தந்தவன் எழுதுகிற கடிதங்களுக்கும்—தான் பதில் தந்தால் அது ஒரு ஆதாரவாக ஏற்பட்டுவிடுமென்றும்—சிலர் பதில் தருவதில்லை. இரவல் பெற்றுச் சென்றவர்களும் இவ்விதமே பதில் கொடுப்பதில்லை. குடும்ப சச்சரவு, பகை, வருத்தங்களாலும் பதில் தருவதில்லை. நஷ்டப்பட்டு வேறு ஊர் போனவர்களும் இனி அந்த ஊரின் உறவு வேண்டாமென்று பதில் தருவதில்லை. நேசத்தையோ உறவையோ வெட்டிக்கொண்டு விலகிவிட விரும்புவோரும் பதில் கொடுப்பதில்லை. தபால் செலவுக்கு யோசித்துக் கொண்டும் சிலர் பதில் எழுதுவதில்லை. தனது ராங்கி, முறுக்கு, கர்வம், அலக்ஷியம், மதியாமை இவற்றைக் காண்பித்துக் கொள்ளுவதற்காகவும் சிலர் பதில் கடிதம் போடுவதில்லை. ஒரு வியாபாரியை இன்னொரு வியாபாரி மோசஞ்செய்ய நினைத்தால் அப்போது பதில் தருவதில்லை. புதிதாகப் பெரிய மனிதராகித் தன் பழய நண்பர்களிடம் பேசுவது கூடத் தனக்கு ஒரு இளப்பமென்றும் கேவலமென்றும் எண்ணும் புது வாழ்விலுள்ள மௌடீகப் பெருமைப் பைத்தியங்களும் பதில் கடிதம் தருவதில்லை. கடிதம் எழுதுவதற்கு மனிதர் கிடைக்காமலும் படியாத சிலர் பதில் எழுதாமற் போவதுண்டு.

இவர்களெல்லாம் ஒவ்வொரு காரணத்தை யுத்தேசித்துப் பதில் எழுதுவதில்லை. ஆனல், நாம் மேலே குறிப்பிட்ட விஷயமோ—பிறரது மனஸ்தாபம் வேண்டாமென்றசிந்தையுடனும், பதில் எழுதிப் பகையாவானேன் என்றும் யோசித்தே பதில் தாரதிருந்துவிடுவதாகும். அவ்விதமான சங்கதிகளில் பதில் தாராதிருந்துவிடுவதிலுள்ள சுகம், பதில் தருவதில் தோன்றுவதில்லை யென்பது பலகாலும் கண்டறிந்த அநுபவமாகும்.

## சந்தா நேயர்களுக்கு ஓர் விண்ணப்பம்.

நமது "அமிர்த குணபோதினி" வைகாசிமாத சஞ்சிகையைச் சற்று கனத்த காகிதத்தில் அச்சிட்டதாலும், அத்துடன் கவனப்பிசகாய் நமது வேலைக்காரர்கள் அநுபந்தமும் சேர்த்தனுப்பியதாலும், எடை அதிகரித்துத் தபாலாபீஸ் அதிகாரிகள் 0—1—6 அதிக கட்டணம் கட்டவேண்டுமென்று முத்திரையிட்டு அனுப்பியதை நமது சந்தா நேயர்களில் அநேகர் ஷை அதிக கட்டணத்தைச் செலுத்திப் பெற்றுக்கொண்ட ஸ்ரமத்திற்காக எங்கள் நன்றி அறிதலைச் செலுத்தக் கடமைப்பட்டவர்களா யிருப்பதும் தவிர, அவ்விதம் செலுத்திப் பெற்றுக்கொள்ளாமல் திருப்பிவிட்ட நேயர்களில் இதுவரையில் யாருக்காவது ஷை பிரதி சேராமலிருந்து நமக்குத் தெரிவித்தால் அனுப்பிவைக்கிறோம். இனி இவ்வித தப்பிதங்கள் எதுவும் நேராவண்ணம் இவ்விடத்தில் ஏற்பாடு செய்திருக்கிறோம்.

இப்படிக்கு
பத்திராதிபர்.

# "அமிர்த குணபோதினி"

## பிரமோதூத வருஷத்திய ஆனி மாத பஞ்சாங்கம்.

| யோகம் | இங் | தமிழ் | வார | திதி, நக்ஷத்திரம், விரதாதிகள் முதலியவை. |
|---|---|---|---|---|
| சி | 14 | 1 | ச | திரி 26-42, உரா 47-5, சூன்யதிதி, மிதுனரவி 30-35, கரிநாள், உத்திராடம் அசுபம், அஹஸ் 31-55, மோஹரம்மீ 16வ |
| அ-ம | 15 | 2 | ஞா | சது 32-15, பூருவ 54-16, சூன்யதிதி |
| சி | 16 | 3 | தி | பஞ் 38-12, அவி 60-0 பஞ்சமிதிதி |
| சி-ம | 17 | 4 | செ | ஷஷ் 44-4, அவி 1-38 |
| சி-அ | 18 | 5 | பு | ஸப் 49-24, சத 8-50, அஹஸ் 31-56 |
| சி | 19 | 6 | வி | அஷ் 53-38, பூட் 15-16, கரிநாள், திரிலோசன பூஜா. |
| சி-அ | 20 | 7 | வெ | நவ 56-18, உட் 20-36, ரேவதி அசுபம். |
| பி-சி | 21 | 8 | ச | தச 57-10, ரே 24-12 |
| சி-பி | 22 | 9 | ஞா | ஏகா 55-57, அசு 25-53, கடகாயனம் 8-59 [31-56 |
| சி-ம | 23 | 10 | தி | துவா 52-48, பர 25-33, கிருத்திகா விரதம், அஹஸ் |
| சி-அ | 24 | 11 | செ | திர 47-49, கிரு 23-14, சிவராத்திரி, பிரதோஷம் |
| சி | 25 | 12 | பு | சசி 41-19, ரோ 19-15 [தெப்பம். |
| ம | 26 | 13 | வி | ● 33-39, மிரு 14-0 ஆனி அமாவாசை, திருவள்ளூர் |
| சி | 27 | 14 | வெ | பிர 25-9, ஆரு 7-47, ஆஷாடசுத்தம், திதிதுவயம், துவிதியை அசுபம். [ரதம், அஹஸ் 31-55, ஸபர்மீ 1வ |
| சி-ம | 28 | 15 | ச | துவி 16-23, புந 1-12, உப 53-20, திரிதியா திதி, ராம |
| சி-ம | 29 | 16 | ஞா | திரி 7-43, உப 51-52, ஆயி 48-17 மகம் அசுபம். |
| ம-சி | 30 | 17 | தி | பஞ் 52-18, மக 42-49, மாணிக்கவாசகர், ஸ்கந்த பஞ்சமி, மகம் அசுபம். |
| சி-அ | 1 | 18 | செ | ஷஷ் 46-8, பூர 38-27, சிவரம் கருடசேர்வை |
| அ-ம | 2 | 19 | பு | ஸப் 41-18, உத் 35-24, ஆனிதிருமஞ்சனம், நடராஜர் |
| சி | 3 | 20 | வி | அஷ் 37-54, ஹஸ் 33-49, அஹஸ் 31-54. [அபிஷேகம். |
| சி | 4 | 21 | வெ | நவ 35-59, சித் 33-41. [வாதி, ஸ்ரீ பெரியாழ்வார். |
| அ-சி | 5 | 22 | ச | தச 35-29, ஸ்வா 34-57, ஆனிகருடன், சாக்ஷுஷமன் |
| உ-ம | 6 | 23 | ஞா | ஏகா 36-15, விசா 37-27, திருவல்லிக்கேணி அழிசிங்கர் |
| சி | 7 | 24 | தி | துவா 38-8, அநு 41-2, ஸ்ரீமந்நாதமுனிகள் [கருடன். |
| உ-அ | 8 | 25 | செ | திர 41-0, கேட் 45-35, ஜ்யேஷ்டாபிஷேகம், பிரதோஷம், அருணகிரிநாதர் அஹஸ் 31-51. |
| ம-அ | 9 | 26 | பு | சசி 44-43, மூல 50-56, மன்னார்குடி தெப்பம், காரைக்காலம்மையார் மாங்கனி மஹோத்ஸவம். |
| சி | 10 | 27 | வி | ○ 49-10, பூரா 56-59, வியாஸபூஜை. [துவிதியை அசுபம். |
| சி | 11 | 28 | வெ | பிர 54-18, உரா 60-0, திருவண்ணாமலை உத்ஸவாரம்பம் |
| சி | 12 | 29 | ச | துவி 59-56 உரா 3-40 உத்திராடம் அசுபம் |
| அ-ம | 13 | 20 | ஞா | திரி 60-0 பூருவ 10-50 திருதியாதிதி அஹஸ் 31-48. |
| சி | 14 | 31 | தி | திரி 5-54, அவி 18-16 சதுர்த்தி திதி [தக்ஷிணாயனம். |
| ம | 15 | 32 | செ | சது 11-58, சத 25-44, சூன்ய திதி கடகரவி 74,2-5 |

ஜுன் மீ (15—28)

1930 ஸ்ரீ ஜுலை மீ

| | செ, ரா | பு | சூ, கு |
|---|---|---|---|
| | 15வக்கு ராசி. | | சு |
| | | | |
| ச | | கே | |

"அமிர்த குணபோதினி" பிரஸ், 302, தங்கசாலைத் தெரு, சென்னை, 1930.